


# கல்கி

ஸ்வீட்டா... ஸ்டைலா... ஸ்மார்ட்டா...

KALKI ● 23.08.2009 ● ரூ.10.00 ● 96 பக்கங்கள்






## வாழ்த்த வந்த விநாயகர்!

# புற்றுநோய்க்கு ஒரே இடத்தில் தீர்வு!

## ONE STOP SOLUTION FOR CANCER

- PET CT SCAN
- All Endoscopies
- Linear Accelerator & Brachy Therapy
- Radiation
- IGRT
- Surgical Oncology
- Medical Oncology



- பெட் சிடி ஸ்கேன்
- அனைத்து என்டோ ஸ்கோபி
- கதிர்வீச்சு
- லீனியர் ஆக்ஸிலரேடர் & உட்கதிர்வீச்சு
- IGRT
- புற்றுநோய் அறுவை சிகிச்சை
- புற்றுநோய் மருத்துவம்

**இலவச ஆலோசனைக்கு:**

**(044) 2246 9200**
**(044) 66 300 300**

PET CT CENTRE AT CANCER INSTITUTE (WIA)
CANAL BANK ROAD, GANDHI NAGAR, ADYAR, CH-20

24 HRS PHARMACY & AMBULANCE SERVICES AVAILABLE

## Dr. KAMAKSHI MEMORIAL HOSPITAL



# 1, Radial Road, Pallikaranai, Chennai - 600 100.
Ph: 2246 9200, 66300300 Fax : 22463282 66300400
E-mail: info@drkamakshimemorialhospital.org.
Website: drkamakshimemorialhospital.org.

சூர்யாவின் அடுத்த படம் தமிழ், தெலுங்கு, கன்னடம், மலையாளம்... என நான்கு மொழிகளிலும் ரிலீஸாக இருக்கிறதாம். தம்மை இன்னும் எஃபக்டிவ்வாகக் காண்பிக்க வேண்டும் என்பதற்காக இந்தியாவின் டாப் மோஸ்ட் கேமராமேனை, இயக்குநராகத் தேர்ந்தெடுத்திருக்கிறாராம் சூர்யா.

**(விட்டா... லென்ஸுக்குத் திருஷ்டி சுத்திப் போடுவாங்களோ...)**

வடிவேலு, இப்போது முழு படத்தில் நடிப்பதை விட, படத்தின் ஐந்து காட்சிகளில் வந்தால் போதும் என முடிவெடுத்திருக்கிறாராம். படம் முழுக்க நடித்து வாங்கும் தொகையை ஐந்து ஸீன்களில் நடித்து சம்பாதித்து விடலாம் என்பதுதான் கணக்கு.

**(கணக்குல ஏதாவது பிணக்கு வராம பாத்துக்கங்க அப்பு!)**



# சினி

எந்திரனுக்குப் பிறகு டைரக்டர் ஷங்கர் ஹீரோவாக நடிக்க வருகிறாராம். இருபது வருடங்களுக்கு முன்பு நடிகனாக வேண்டும் என்ற ஆசையோடுதான் கோடம்பாக்கம் வந்தாராம்.

**(உங்க ஆசைக்கு நாங்கதான் கிடைச்சோமா?)**

தொடர்ந்து சேரனோடு நடித்து வரும் பத்மப்ரியா, ''எனது அடுத்த படமும் சேரனோடுதான். ஏனெனில் நாங்க ரெண்டு

# நியூஸ் பாய்

பேரும் நடிச்சா அந்தப் படம் ஹிட்டுதான்'' என்று சகட்டுமேனிக்கு அளந்து விடுகிறாராம்.

*(பத்மப்ரியா பேச்சல செமஃப்ரீயா?)*

**'மோ**தி விளையாடு' காஜல் அகர்வால், தெலுங்கில் சிரஞ்சீவி மகனோடு நடித்த ஒரு படம், சூப்பர் டூப்பர் ஹிட்டாக 1500 தியேட்டர்களில் திரையிடப்பட்டிருக்கிறதாம். அம்மணி இனி தமிழுக்கு 'நோ' என்கிறாராம்!



# சிப்ஸ்

*('நோ'வெல்லாம் சொன்னா வேலைக்கு ஆகாது தாயி!)*

**'நா**ன் கடவுள்' படத்தில் நடிக்க மறுத்த பாவனா, அந்தப் படத்தின் இயக்குநர் பாலாவின் திறமையைக் கண்டு, "உங்கள் படத்தில் நடிக்க நான் ரெடி'' என்று எஸ்.எம்.எஸ். புறாவைத் தூதுவிடுகிறாராம்.

*(வெளுத்ததெல்லாம் பாலு இல்லை அம்மணி)*

**வி**ஜய்யின் 50-வது படத்துக்கு இயக்குநராக எஸ்.பி.ராஜ்குமாரை புக் செய்து வைத்திருந்தனர். இப்போது அவர் எடுத்த 'அழகர்மலை' ஆட்டம் கண்டிருப்பதால், இயக்குநரை மாற்றலாம் என்று தளபதி வட்டாரத்தில் செய்தி அடிபடுகிறது.

*(அப்புறம் தளபதிக்கு அடிபட்டிடுச்சன்னா...?)*




கல்கி

பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட்டிற்காக பரதன் அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடுபவர்: லக்ஷ்மி நடராஜன்

ஆசிரியர் : சீதா ரவி

உதவி ஆசிரியர்கள் : கதிர்பாரதி, அமிர்தம் சூர்யா

வடிவமைப்பு : எஸ்.ஸ்டீஃபன், எம்.மோகன், பா.கோபால்

தொலைபேசி : 044 - 4343 8888

தொலைநகல் : 044 - 4343 8899

ஆசிரியர் குழு : 044 - 4343 8822

kalki@kalkiweekly.com

விளம்பரப் பிரிவு : 044 - 4343 8811

marketing@kalkiweekly.com

சந்தா பிரிவு : 044 - 4343 8833

subscription@kalkiweekly.com

விற்பனை பிரிவு : 044 - 4343 8844

sales@kalkiweekly.com

இன்டர்நெட் முகவரி : www.kalkionline.com

இணையதளத்தில்... வாங்கி, வாசித்து, மகிழ... www.sangapalagal.com

சந்தா விவரம் (ஒரு வருடம்) :

உள்நாடு : ரூ.500/-

வெளிநாடு : ரூ.3,800/-

கல்கி பில்டிங்க்ஸ், 47-NP, ஜவாஹர்லால் நேரு சாலை, ஈக்காடுதாங்கல், சென்னை - 32

இதழில் வெளியாகும் விளம்பரங்களின் உண்மைத் தன்மைக்கு கல்கி நிர்வாகம் பொறுப்பல்ல.

# சாதனைப் பட்டியல்

● ரேவதிப்ரியன், ஈரோடு

? தோற்போம் எனத் தெரிந்தும் சுயேச்சையாகப் போட்டி போடுபவர்களைத் தடுக்க தேர்தல் ஆணையம் நடவடிக்கை எடுக்குமா?

! ஏன் எடுக்க வேண்டும்? போட்டியிடுவது அவர்கள் உரிமை. கட்சி பலம் இல்லாதவர்களுக்கும் சமதளமான போட்டி மைதானம் அமையும் வகையில் தேர்தல் நடத்தப்பட வேண்டும். அவ்வாறு அதை நடத்திக் காட்டுவதே தேர்தல் கமிஷனின் பணி!

● விஜி.சத்தியநாராயணன், சென்னை-61

? அரசு மருத்துவமனைகளில் வழங்கும் சீட்டில் நோயின் தன்மை, மருந்து மாத்திரை விவரங்களைத் தெளிவாக எழுதிக்கொடுக்க உத்தரவிட்டுள்ளது பற்றி...?

! எல்லா மருத்துவர்களுக்குமே இந்த விதி பொருந்த வேண்டும். பல டாக்டர்கள் மருந்துச் சீட்டின் பின்புறம், நோயின் தன்மை பற்றிக் குறிப்பெழுதுவார்கள். அடுத்த முறை வரும்போது மருந்துச் சீட்டைக் கொண்டுவரச் சொல்லுவார்கள். நல்ல நடைமுறை.

● எஸ்.கே.மூர்த்தி, கும்பகோணம்

? மும்பை குண்டு வெடிப்பு வழக்கில் தூக்குத் தண்டனை விதிக்கப்பட்ட மூன்று தீவிரவாதிகளுக்கும் நிச்சயம் அத்தண்டனை வழங்கப்படும் என்று நம்புகிறீர்களா?

! ம்ஹூம்! வழக்கு உச்சநீதிமன்றம் போகும். அதன் பின்னரும் அதே தீர்ப்பு நீடித்தால், கருணை மனு இருக்கவே இருக்கு! எத்தனை காலம் தொங்கலில் இருக்குமோ? அதற்குள் குற்றவாளியின் ஆயுளே முடிந்து போகலாம்!

● த.வரதன், திருவாரூர்

? சிவகாசி பட விவகாரத்தில் வக்கீல்களிடம் நடிகர் விஜய் குழுவினர் மன்னிப்புக் கோரியுள்ளது போல, போலீஸ், மருத்துவர், நர்ஸ் போன்றவர்களிடமும் வேறு சில தயாரிப்பாளர்கள் மன்னிப்பு கேட்பார்களா?

! குறிப்பிட்ட ஒரு துறையைச் சேர்ந்த ஒரு கதாபாத்திரம் இழிவுபடுத்தப்பட்டால் அதைப் பெரிதுபடுத்தக் கூடாது. அது



கதையோட்டத்துக்கு அவசியம். ஒரு துறையே இழிவு படுத்தப்படுமானால் அது பெரும் தவறுதான். மன்னிப்புக் கோர வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்படும்.

● கே.தெய்வசிகாமணி, சென்னை-82

**? ஒசூர் அருகே கன்டெய்னர் லாரியைக் கடத்தி ஐம்பது லட்சம் ரூபாய் மதிப்புள்ள சிகரெட் கொள்ளையடிக்கப்பட்டுள்ளதே?**


* நிதக பட்டியல்!

# தருகிறாரே முதல்வர்?

! அந்த ரூட்டில் கன்டெய்னர் கொள்ளைகள் பெருகி வருகின்றன. சரக்கு எதுவாக இருந்தாலும், கொள்ளையடிப்போருக்குக் கொள்ளை லாபம்தான்! அரசு நடவடிக்கை, சுறுசுறுப்புப் பெறாவிட்டால் சாலையேகூட கொள்ளை போனாலும் ஆச்சர்ய மில்லை!

● அவ்வை கே.சஞ்சீவிபாரதி, கலிங்கியம். ❑

**? பீஹாரில் பள்ளிக்கு வரும் குழந்தைகளுக்கு, தினம் ஒரு ரூபாய் திட்டம் செயல்படுவது குறித்து?**

! பிஞ்சுகள் மனத்தில் வஞ்சம் விதைக்கும். கல்வி ஆர்வத்தினாலும் சூழலின் இனிமையினாலும் குழந்தைகளைப் பள்ளிக்கு வரவழைக்க இயலாமல் போனது இந்தத் தேசத்தின் மிகப் பெரிய தோல்விகளுள் ஒன்று!

● எஸ்.சக்தி, இராஜபாளையம்

**? நம் நாட்டில் விளையும் உணவுப் பொருட்களைப் பாதுகாக்க நடவடிக்கைகள் எடுக்காததால், ஆண்டுக்கு ஐம்பதாயிரம் கோடி நஷ்டம் ஏற்படுவதாக அதிர்ச்சித் தகவல் வெளியாகியுள்ளதே?**

! இந்தச் செய்தி புதிதல்ல; ஆண்டுதோறும் நஷ்டத் தொகை அதிகரித்து வருகிறது என்பதுதான் சோகம்! உணவுப் பற்றாக்குறையைக் களைவதில், உணவுப் பொருட்கள் பாதுகாப்பு மிக முக்கியப் பங்கு வகிக்கிறது. ஒரு மணி அரிசி விளைவிக்க ஒரு விவசாயி படும்பாட்டைக் கருதுகையில், இதில் அரசு காட்டும் மெத்தனம் கொடுமை!

● இராம.வாணி, திருவாரூர்

**? ''உலகப் பொருளாதாரத்தில் நம் நாடு முதல் நிலையை அடைய வேண்டுமானால், பல்கலைக்கழகங்கள் ஆராய்ச்சிக்கு முக்கியத்துவம் தரவேண்டும்'' என்கிறாரே மு.க.ஸ்டாலின்?**

! லஞ்ச-ஊழல் களைவது எப்படி என்பது உள்பட பொருளாதாரத்தில் ஆராய்ச்சி ஏற்கெனவே நிறைய நடந்திருக்


* அறிவுறுத்திய ஆராய்ச்சி!

## நீங்கள் கேட்டவை - தராசு

கிறது. அவற்றை எடை போட்டுப் பின்பற்றி, வளம் சேர்க்கும் ஆற்றல்தான் ஆட்சியாளருக்கு வேண்டும்; அது தான் குறைவாக உள்ளது.

● மு.பெரியசாமி, விட்டுக்கட்டி

*? 4,68,000 வழக்குகள் சென்னை உயர்நீதிமன்றத்தில் தேங்கிக் கிடக்கின்றன என்று ஐகோர்ட் தலைமை நீதிபதி தெரிவித்துள்ளாரே?*

! நதி போல தடங்கலின்றி ஓட வேண்டிய நீதி, குட்டை போல தேங்கி விடுவதால் அதில் அநீதி எருமைகள் இறங்கி சுகம் காண்கின்றன.







நீதிபதிக்குத் தெரியாதது அல்ல.

● ஆர்.மாதவராமன், கிருஷ்ணகிரி

*? ஒகேனக்கல் கூட்டுக் குடிநீர் திட்டத்தினை நிறுத்தி வைக்க மத்திய அரசை வலியுறுத்தியிருக்கிறாரே யெதியூரப்பா?*

! ஒரு பக்கம் திருவள்ளுவர் சிலை திறக்க வைத்து நல்லுறவு நாடுகிறார்; மறுபுறம் ஒகேனக்கலுக்கு உரிமை கொண்டாடி, கர்நாடக மக்களிடம் நல்ல பெயர் தட்டிக் கொள்ளப் பார்க்கிறார். எல்லாம் வோட்டு அரசியல் படுத்தும் பாடு!

● ஜி.இந்திரா, பெங்களூரு-17

*? பெண்களுக்கு எதிரான கொடுமைகளுக்கு விடிவு தேடிக் கொண்டிருக்கும் வேளையில், சமீபத்தில் உயர்நீதிமன்றம், மாமியார் மருமகளை உதைப்பது கொடுமையாகாது என்று கூறியது சரியா?*

! குறிப்பிட்ட குற்றப்பிரிவின் கீழ் இந்தச் செயல் இடம்பெறாததால் அந்தப் பிரிவின் கீழ் கடும் தண்டனை வழங்கும் அளவுக்குக் கொடுமையாகாது என்றுதான் தீர்ப்பு வழங்கப்பட்டுள்ளதே தவிர, அந்தச் செயல் கொடுமையானதே அல்ல என்பதாக நீதிபதி கூறவில்லை.

● பி. ஜெயப்பிரகாஷ், சர்கார்பதி ★

*? 'மக்களுக்கு தி.மு.க. அரசு எந்த நன்மையும் செய்யவில்லை' என்ற விஜயகாந்த் விமர்சனத்துக்கு, அரசின் 121 சாதனைகளைப் பட்டியலிட்டுள்ளாரே முதல்வர்?*

! தெரு விளக்கு போட்டதும் பாலம் கட்டினதும் சாதனைகளாக மாட்டா! இவைபோன்ற காரியங்கள் ஓர் அரசின் கடமைகளே. தொழில் முன்னேற்றம், அரசுக் கடன் பெருகாமல் குறைதல், விலைவாசி கட்டுப்பாட்டுக்குள் வருதல், தனிநபர் வருமானம் பெருகுதல் போன்றவையே சாதனைகள்.

● வி.எம்.செய்யது புகாரி, அதிராம்பட்டினம்

*? இடைத் தேர்தலைப் புறக்கணித்த ஜெ.வை வரும் சட்டசபை தேர்தலில் தமிழ் மக்கள் புறக்கணிப்பார்களா?*

! அப்போதைய வியூகங்கள் அமைவதைப் பொறுத்தது அது! அந்தத் தேர்தலையாவது ஜெ. புறக்கணிக்காமல் இருந்தால் சரி!

❑ ரூ.150 பரிசு பெறுபவர்: அவ்வை கே.சஞ்சீவிபாரதி, கலிங்கியம்

★ ரூ.75 பரிசு பெறுபவர்: பி.ஜெயப்பிரகாஷ், சர்கார்பதி

# சிரி...சிரி...சிரி!

சுஜாதா-கணேஷ்



















சி.பூங்கோதை




வருகின்றன...'' என்ற சந்திரனை, பர்கூர் தொகுதி பிக்காலூர் கிராமத்தில் சந்தித்தோம்.

''இடைத் தேர்தல் நடக்கும் ஐந்து தொகுதிகளில் முழுக்க முழுக்க அ.தி.மு.க.வுக்கு ஆதரவான தொகுதி பர்கூர். 1977 முதல் நடந்த ஒன்பது தேர்தல்களில், ஏழு முறை அ.தி.மு.க.வே வெற்றி பெற்றிருக்கிறது. ஆனால், அது போட்டியிடாதது தொண்டர்களை வருத்தமடையச் செய்திருக்கிறது.

# பர்கூரில் 'திருமங்கல

''தமிழகத்தில் உள்ள மற்ற 233 தொகுதிகளைவிட பர்கூர் சற்று வித்தியாசமானது. 1996ல் சர்வவல்லமையோடு இருந்த ஜெயலலிதாவைத் தோற்கடித்த தொகுதி இது. பணமெல்லாம் இங்கே எடுபடாது'' என்கிறார் பர்கூர் தே.மு.தி.க. வேட்பாளர் சந்திரன். இவரது வேட்புமனுவில் குறைபாடுகள் இருந்ததால் அதிகாரபூர்வமான தே.மு.தி.க. வேட்பாளராகப் போட்டியிட முடியவில்லை. ஆனாலும் முரசு சின்னத்தைப் பெற்றுவிட்டார்! ''நாங்கள் போட்டியிடுவதைத் தடுக்க முயன்றது ஆளும் கட்சி. இப்போதுகூட, 25 கோடி கொடுக்கிறோம். போட்டியிலிருந்து விலகி தி.மு.க.வுக்கு வந்து விடுங்கள் என்று அநாமதேய அழைப்புகள்

களத்தில் முக்கிய எதிரி இல்லையென்று சற்றும் கூட தி.மு.க. மெத்தனமாக இருக்கவில்லை. தொகுதியெங்கும் தி.மு.க. கொடியுடன் இன்னோவாக்களும், க்வாலிஸ்களும், சர்சர் என்று வலம் வருகின்றன. 'ஒப்பில்வாடி' என்ற சிறு கிராமத்தில் அறுபது வண்டிகள் நிற்கின்றன'' என்று நம்மிடம் சொன்னார்கள் தே.மு.தி.க.வினர். எட்டு அமைச்சர்கள், நாற்பது எம்.எல்.ஏ.க்கள், ஆறு மாவட்டச் செயலாளர்கள் மற்றும் நூற்றுக்கும் மேற்பட்ட ஒன்றிய, நகர, கிராமச் செயலாளர்கள் ஆளும் கட்சிக்காகக் களத்தில் நிற்கிறார்கள். இவர்களில் தொண்ணூறு சதவிகிதம் வெளியூர்க்காரர்கள். தேர்தல் யுக்தியின் புதிய 'தொழில்நுட்பமாக' திருமங்கலம் வியூகம் திட்டமிட்டு வகுக்கப்படுகிறது.

எந்தவிதமான கணக்கத்துக்கும் இடம் கொடுக்க தி.மு.க. தயாராக இல்லை. ''தேர்தலைப் புறக்கணித்தது ஜெயலலிதா செய்த மாபெரும் தவறு என்பதை நிரூபித்து, அதிக அளவில் வாக்காளர்களை வாக்குச் சாவடிக்குக் கொண்டு சேர்ப்போம்'' என்கிறார் தி.மு.க. தேர்தல் பொறுப்பாளரான செல்வகணபதி. அ.தி.மு.க. முன்னாள் பிரமுகரான இவர், எதிரியின் பலம், பலவீனங்களை அறிந்தவர்.

''ஜெ. ஆட்சிக் காலத்தில் சாத்தான்குளம், சைதாப்பேட்டை, வாணியம்பாடி இடைத்தேர்தல்களில் நடந்த அநியாயங்களை அவ்வளவு விரைவில் மறந்து விடமாட்டோம். ஐந்நூறு ரூபாய் நோட்டை வாக்காளர்களுக்கு அறிமுகப்படுத்தியவரே அம்மையார்தானே! தேர்தலில் வெற்றி உறுதி என்றாலும், அதிக வாக்குப் பதிவின் மூலம் 'கலைஞரின்

# வியூகம்'!




பர்கூர் தொகுதியின் ஒப்பில்வாடி கிராமத்தில் மட்டும் தி.மு.க.வினரின் அறுபது கார்கள் நிற்கின்றன!



* சந்திரன்-தே.மு.தி.க.



* கண்ணு-வலது கம்யூனிஸ்ட்



* சுசிலா



* ராஜன்

மூன்றாண்டுகால சாதனைகளை மக்கள் அங்கீகரிக்கிறார்கள்' என்ற உண்மையை உலகுக்குச் சொல்ல வைப்போம்'' என்கிறார் வேலு. தி.மு.க. தரப்பு, தே.மு.தி.க. வேட்பாளரை 25 கோடிக்கு விலைபேசுகிறதாமே என்று கேட்டால், ''அதற்கெல்லாம் அந்த வேட்பாளர் தகுதியில்லாதவர்'' என்று முடித்துக் கொண்டார்.

இந்தக் கச்சேரியில் வலது கம்யூனிஸ்ட் வேட்பாளர் கண்ணு களத்தில் இருப்பதே தெரியவில்லை. சிகரப்பள்ளியில் தென்னந்தோப்புகளுக்கிடையே, விரல்விட்டு எண்ணக்கூடிய தொண்டர்களுடன் பிரசாரத்தில் ஈடுபட்டிருந்த கண்ணுவைச் சந்தித்தோம். ''தொகுதியெங்கும் குடிதண்ணீர்ப் பிரச்னை. ஊரக வேலை திட்டத்தில் ஊழல், விலைவாசி உயர்வு... என்று மக்கள் கடுப்பில் இருக்கிறார்கள். என்னதான் கிடாவெட்டி கறிசோறு போட்டாலும், மக்கள் ஆளும் கட்சிக்கு வோட்டுப் போடமாட்டார்கள்'' என்கிறார் கண்ணு. ''எங்கள் தோழர்களை யாரும் பணம் கொடுத்து வாங்க முடியாது'' என்கிறார் கட்சியின் மாநிலக் குழு உறுப்பினரான சுசிலா. பா.ஜ.க.வும் களத்தில் இருக்கிறது.

**அ.தி.மு.க.** தொண்டர்களுக்கும் அனுதாபிகளுக்கும் புறக்கணிப்பு தொடர்பான விழிப்புணர்வு இல்லை. அ.தி.மு.க. பாராளுமன்ற உறுப்பினர் தம்பிதுரையின் சொந்த கிராமமான சிந்தகம்பள்ளியில் தம்பிதுரையின் சகோதரர் ராஜனிடம் பேசினோம். ''நாங்க யாருக்கு வோட்டுப் போடுவோம் என்று சொல்ல முடியாது'' என்றாரே தவிர, 'புறக்கணிப்பு' என்று சொல்லவில்லை.

**அ.தி.மு.க. அனுதாபிகளுக்கும் தொண்டர்களுக்கும் தேர்தல் புறக்கணிப்பு குறித்த விழிப்புணர்வு இல்லை!**

இந்த நிலையில் தே.மு.தி.க.வினர் அ.தி.மு.க. வோட்டுக்களைப் பெறுவதற்குக் கடும் முயற்சி எடுத்து வருகிறார்கள். (சென்ற பாராளுமன்றத் தேர்தலில் பர்கூர், மத்தூர் ஒன்றியங்களில் தே.மு.தி.க. 22,000 வோட்டுகள் வாங்கியிருக்கிறது.) தி.மு.க.வும் அ.தி.மு.க. பிரமுகர்களை வளைத்துப் போடுவதில் மும்முரம் காட்டுகிறது.

முக்கியமான எதிர்க்கட்சி களத்தில் இல்லாததால், தேர்தல் முறைகேடுகள் மீடியாவில் வர வாய்ப்பில்லை.

– ப்ரியன்

படங்கள் : ராஜன்



''உன் பத்து ஏக்கர் நிலத்துல என்ன போட்டிருக்க?''

''அஞ்சு லட்ச ரூபாய் கேட்டு பேங்குல லோன் போட்டிருக்கேன்!''

-வீ.விஷ்ணுகுமார்



''பதவிங்கறது தோள்ல கிடக்கற துண்டு மாதிரினு எங்க தலைவர் சொல்லிட்டார்!''

''ஓ... அதான் துண்டை உங்க தலைவர் கெட்டியா பிடிச்சிருக்காரோ!''

- எஸ்.முகம்மது யூசுப்

# பதவித் துண்டு!


* எம்.எஸ்.விக்கு மரியாதை

அவர்களின் செயல்களைப் பார்த்து மற்றவர்கள் பாராட்டினால்தான் நன்றாக இருக்கும்' என்று அவர் ஸ்டைலில் பதில் தந்தார்.

கமல் ஸார், 'இந்த நேரத்தில் என் ரசிகர்களுக்கு நன்றி சொல்லக் கடமைப்பட்டிருக்கிறேன்' என்று உணர்ச்சிவசப்பட்டுப் பேசினார்.

ரசிகன் நிகழ்ச்சியின் 25வது வாரம், இளையராஜா ரசிகர்களை மையமாக வைத்துத் தயாரிக்கப்பட்டது. சினிமா சார்ந்த டீ.வி. ஷோக்களில் இசையமைப்பாளரின் ரசிகர்களை மையமாக வைத்து ஒளிபரப்பான நிகழ்ச்சி ரசிகனாகத்தான் இருக்கும். மாநில, தேச எல்லைகள் தாண்டி நிறைய ரசிகர்களை இசையால் ஈர்த்திருக்கிறார் இளையராஜா.

# ரசிகனின் கற்பனை ஓவியம்!



"சினிமா ரசிகன் என்றாலே, விசில் அடிப்பவன், நடிகரின் கட்-அவுட்டுக்கு பாலாபிஷேகம் செய்பவன், நடிகைக்குக் கோயில் கட்டுபவன் என்ற நெகடிவ்வான எண்ணங்களே பெரும்பாலான மக்கள் மத்தியில் இருக்கின்றது. இந்த எண்ணத்தை மாற்றி, ரசிகர்களின் திறமைகளையும் ஆக்கபூர்வமான பணிகளையும் மக்களிடையே கொண்டு செல்வதே இந் நிகழ்ச்சியின் நோக்கம்" என்கிறார் கலைஞர் டி.வி.யின் ரசிகன் நிகழ்ச்சி இயக்குநர் மணிவண்ணன்.

"இந்த நிகழ்ச்சியின் கான்செப்ட், தயாரிப்பாளர் விஜயகுமாருடையது. திரை வடிவம் கொடுத்தது நான். நிகழ்ச்சியை ஆரம்பிப்பதற்கு முன்பு ரஜினி ஸார் வீட்டுக்குச் சென்று அவரிடம் ஆசி பெற்றேன்.

'ஸார், உங்கள் ரசிகர்களைப் பாராட்டி நிகழ்ச்சியில் பேச முடியுமா?' என்று கேட்டேன். 'என்னுடைய ரசிகர்களை நானே பாராட்டிப் பேசினால் நன்றாக இருக்காது.

இளையராஜா ரசிகர்களில் விசாகப்பட்டினத்திலிருந்து பூபதி - அனுபமா என்ற தம்பதி வந்திருந்தனர். இவர்கள் இருவருமே பல வருடங்களுக்கு முன்பு

இளையராஜாவைச் சந்தித்தபோது, சாப்பிடுவதற்கு பிஸ்கெட் தந்திருக்கிறார். அவர்கள் இருவருமே அந்த பிஸ்கெட்டைச் சாப்பிடாமல் இன்று வரை பத்திரமாக கண்ணாடி பாட்டிலில் வைத்துப் பாதுகாத்துக் கொண்டிருக்கிறார்கள். அந்த அளவுக்கு இளையராஜாவை உணர்வுபூர்வமாக நேசிக்கும் ரசிகர்கள் பல்வேறு துறைகளிலும் இருக்கிறார்கள். தமிழின் சிறப்பை அடுத்த தலைமுறைக்குக் கொண்டு சென்றதில்



இளையராஜாவின் பங்களிப்பு முக்கியமானது.

பாடகர்களில் சீர்காழி கோவிந்தராஜனின் ரசிகர்கள் பங்குபெறும் நிகழ்ச்சி ஏற்பாடு செய்திருந்தோம். பெரிய அளவில் ரசிகர்களை எதிர்பார்க்கவில்லை. ஆனால் சீர்காழியின் சமகால நண்பர்களே ரசிகர்களாகப் போட்டியில் கலந்து கொண்டார்கள். கர்ணன் படத்தில் சீர்காழி பாடும் 'உள்ளத்தில் நல்ல உள்ளம்' பாடலை, ரசிக நண்பர்கள் பாடும்போது, ஏதோ செட்டுக்குள் சீர்காழியே வந்து விட்டது போன்ற உணர்வு எங்கள் யூனிட்டுக்கு ஏற்பட்டது.

ரசிகர்களுக்காக நடத்திய நிகழ்ச்சியில், ரசிகர்களைக் காணும் ஆர்வத்தில், மெல்லிசை மன்னர் எம்.எஸ். விஸ்வநாதன் நிகழ்ச்சிக்கு வந்திருந்தார். 'எங்களுக்காக இவங்க புரோக்ராம் நடத்துறாங்க. இவங்களை நான் பார்க்க வர்றது தான் முறை' என்று, இந்தத் தள்ளாத வயதிலும், வந்து வாழ்த்திச் சென்றார்.

இனிவரும் வாரங்களில் கண்ணதாசன், வைரமுத்து, வாலி போன்ற கவிஞர்களின் ரசிகர்களை மையமாக வைத்து நிகழ்ச்சிகள் வரப்போகின்றன.

கண்ணதாசனை மையப்படுத்திய நிகழ்ச்சியில் கண்ணதாசன் இயற்றிய திரைப்பாடலை, அவர் இயற்றும்போது மனத்தில் எப்படியெல்லாம் கற்பனை செய்திருப்பார் என்பதை ஓவியங்களாகத் தீட்டியிருக்கிறோம். அந்த ஓவியங்களைப் பார்த்து ரசிகர்கள் அது எந்தப் பாடலோடு ஒத்துப்போகிறது என்று சொல்ல வேண்டும். ஓவியங்களை ஓவியர் மணியம் செல்வன் வரைந்திருக்கிறார்.

இனிவரும் காலத்தில் நமது முதல்வர் கலைஞரின் திரைப்படைப்புகளை மையப்படுத்தி அவரது ரசிகர்களுக்காக நிகழ்ச்சி நடத்தும் எண்ணமும் உள்ளது. அரசியல் தாண்டி எத்தனையோ தமிழ் உள்ளங்களை, பேச்சாலும், எழுத்தாலும் ஈர்த்தவர் கலைஞர்'' என்கிறார் மணிவண்ணன். இளையராஜாவின் தீவிர ரசிகரான இவர் பி.ஈ. மெக்கானிகல் இன்ஜினீயரிங் பட்டதாரி.


● மணிவண்ணன்

**- ராகவ்குமார்**



# கல்கி



2009 ஆகஸ்ட் 23
விரோதி ஆவணி 7
மலர் : 68
இதழ் : 4

தமிழ்த்திரு
நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி
பாப்பா - பாரதியார்

## பன்றிக் காய்ச்சல் - அச்சமும் அச்சுறுத்தலும்!

பன்றிக் காய்ச்சல் மேலும் பரவுவதைத் தடுப்பதற்கு, தனியார் மருத்துவமனைகளின் துணையை நாட மத்திய அரசு இப்போதுதான் முடிவு செய்திருக்கிறது! நாடெங்கிலும் 864 பேர் இந்தக் கொடிய நோயின் தாக்குதலுக்கு உள்ளான பிறகு, சில உயிர்கள் பலியான பிறகு, இந்த நடவடிக்கை எடுக்கப்பட்டிருக்கிறது. இது நமது அரசின் மெத்தனத்துக்கும் தீர்கதரிசனமின்மைக்கும் இன்னொரு உதாரணம்.

இந்த நோய் முதலில் நம் நாட்டில் தாக்கவில்லை; அயல்நாடுகளிலிருந்துதான் வந்தது. அந்நாட்டு மருத்துவமனைகளில் பன்றிக் காய்ச்சல் நோயாளிகளுக்குச் சிகிச்சை அளித்த மருத்துவர்களின் அனுபவத்தைக் கேட்டறிந்திருந்தாலே நாம் இந்நோயை இங்கு பரவவிடாமல் எதிர்கொண்டிருக்கலாம். அதில் நாம் சுறுசுறுப்பு காட்டாததுடன், நம் நாட்டில் ஜனத்தொகை மிக அதிகம் என்பதையும், அதனாலேயே நோய்கள் வேகமாகப் பரவுவதற்கான வாய்ப்புகள் அதிகம் என்பதையும் நினைவில் கொள்ளத் தவறியிருக்கிறோம்.

மேலும், பன்றிக் காய்ச்சலின் ஆரம்ப அறிகுறிகள் சாதாரண ஜுரத்தின் அறிகுறிகளைப் போலவே இருக்கின்றன! நம் நாட்டில் உள்ள படிப்பறிவில்லாத, ஏழை-எளிய மக்களுக்கு இதைக் குறித்து எச்சரிக்கும் பொறுப்பிலும் நாம் தவறியிருக்கிறோம்!

தற்போது ஒரு சில மரணங்கள் நிகழ்ந்துள்ள நிலையில், நோயைக் காட்டிலும் நோய் குறித்த அச்சம் மிக அதிகமாகியிருக்கிறது. உண்மையில் இத்தகைய அச்சம்தான் நோயைக் காட்டிலும் கொடியது. மக்களின் அச்சத்தைப் போக்கி, நோய் பற்றிய தெளிவை ஏற்படுத்தும்









வகையில் அரசே செய்திப் படங்களையும் ஒலிபரப்புகளையும் சிறப்பாகத் தயாரித்து, அனைத்துத் தொலைக்காட்சி, வானொலி சேனல்கள் மூலமாகவும் செய்தி பரப்ப இப்போதேனும் ஆணையிடவேண்டும். மீடியாவும் இதற்கு ஒத்துழைக்க வேண்டும். கலவரத்தைத் தூண்டும் வகையில் படங்களோ செய்திகளோ வெளியிடக் கூடாது. நோய்த் தடுப்புக்கான வழிமுறைகளை வலியுறுத்திச் சொல்லிக் கொண்டேயிருக்க வேண்டும்.

மாறாக, மக்களை அச்சம்கொள்ளச் செய்வதால் அவர்களது மன இறுக்கம்தான் அதிகரிக்கும். இறுகிய மன நிலையில் மூச்சு சீராக இராது என்பதால் பிராணவாயு குறைந்து, நோய்த் தொற்றுக்குத்தான் உதவும்.

ஆக்கபூர்வமான ஆலோசனைகளுள் ஒன்றாக, அனைவரையும் பிராணாயாமம் செய்யச் சொல்லி அறிவுறுத்தலாம். நோய்த் தொற்றுக்கான வாய்ப்பைப் பிராணாயாமம் குறைக்கும்.

இதையெல்லாம் காட்டிலும் முக்கியமாக, பன்றிக் காய்ச்சல் பரிசோதனைக்கான கட்டணம் உடனடியாகக் குறைக்கப்பட வேண்டும். வெகு சில அரசு மருத்துவமனைகளில் மட்டுமே இப்பரிசோதனை இலவசமாகச் செய்யப்படுகிறது. தற்போது தனியார் மருத்துவமனைகளில் இச்சோதனைக்கான கட்டணம் ரூ.10,000 என்று செய்திகள் கூறுகின்றன! நம் நாட்டில் எத்தனை பேருக்கு இது கட்டுப்படியாகும்?! இச்சோதனைக்கென ஒரு மானியத் தொகையை அரசு உடனடியாக ஒதுக்கி, கட்டணத்தை நூறு ரூபாய்க்குள் குறைப்பதுடன், சோதனைக்கான வசதிகளையும் பெருக்குவது அத்தியாவசியம்.

இதோடுகூட போதுமான அளவு மருந்துகளையும் தருவித்து வைத்துக்கொள்ள வேண்டும். பன்றிக் காய்ச்சல் மருந்துக்குப் பற்றாக்குறை வந்துவிட்டால், அது மன்னிக்க முடியாத தவறாகிவிடும். இதற்கெல்லாம் மத்திய-மாநில அரசுகளின் கூட்டு ஆலோசனையும் செயல்பாடும் தேவை. மக்களின் அச்சம் வெறும் அச்சமாகவே இருந்து மறையட்டும்; நிஜமான அச்சுறுத்தலாக அது ஒருபோதும் மாறலாகாது. ●

**எ**திர்பார்த்ததைவிட இந்த ஆண்டு அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டிக்கு வந்த கதைகளின் எண்ணிக்கை ஆயிரத்தை நெருங்கின. இலங்கைப் பிரச்னையைக் 'கதைத்த' பல்வேறு சிறுகதைகளில் 'சின்னஞ்சிறு தீவு ஒன்டு' தனித்து மின்னியது. மனித நேயத்தை மண் வாசனையுடன் எடுத்துச் சொன்ன ஏ.ஏ.ஹெச்.கே.கோரி, கல்கி வாசகர்களுக்கு நன்கு அறிமுகமானவர். இதற்கு முன்பும் அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டியில் பரிசுகளைப் பெற்றுள்ளார். சென்னைக்குப் புலம் பெயர்ந்து விட்ட இந்த திருநெல்வேலிக்காரருக்கு எழுத்துதான் முழு நேரப் பணி.





'**கோ**லிக்குண்டின் மரணம்' (இரண்டாம் பரிசு) பெற்ற கனகராஜன் வசிப்பது பொள்ளாச்சியில். 1997ல் இவரது 'மறுபடியும்' சிறுகதை கல்கியில் முதல் பரிசு பெற்றது. இப்போது மறுபடியும் ஒரு பரிசு. ஏழு வருடங்கள் எழுதுவதையே நிறுத்தி விட்டாலும் வாசிப்பை நிறுத்தாதவர். மறுபடியும் தம்மை எழுதத் தூண்டிய சில எழுத்தாள நண்பர்களை நன்றியுடன் நினைவு கூர்கிறார்.






# பூங்கொத்து

**மூ**ன்றாம் பரிசு பெற்ற 'அபிமானி', (கதை:உலை) 1980 முதல் எழுதிவருபவர். இவரது முதல் சிறுகதை 'மனுசத்தனம் ஜிந்தாபாத்' வெளியானது நமது கல்கியில் தான் என்று பெருமையுடன் குறிப்பிடுகிறார். இவரும் 2000-ம் ஆண்டு அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டியில் முதல் பரிசு பெற்றவர்.

இவர்களது எழுத்துலகப் பயணம் மேலும் சிறக்க 'கல்கி'யின் சார்பாகவும் வாசகர்கள் சார்பாகவும் வாழ்த்துவோம்.





# பாக்யலக்ஷ்மியும்... வெளவால்களும்..!

**தஞ்சாவூர்க்கவிராயர்**

அப்பாவின் கிராமம் எனக்கு ரொம்பப் பிடிக்கும். அங்கே தான் பாக்கி என்ற பாக்யலக்ஷ்மி இருந்தாள்.

கிராமத்தில் எங்கள் குலதெய்வக் கோயில் இருந்தது. வருஷம் ஒருமுறை அந்தக் கோயிலுக்குச் செல்லும்படி நேரும்.

என் பள்ளிக்கூட சிநேகிதன் ரங்கன், அப்போதுதான் தலையில் சீப்பை அழுத்தி அழுத்தி எப்படி சுருள்முடி வைத்துக் கொள்வது என்று கற்றுத்தர ஆரம்பித்திருப்பான்.

அந்த வாரமே அம்மா நேர்த்திக் கடனுக்காக குலதெய்வக் கோயிலுக்குப் போய் எனக்கு மொட்டை போட்டு விடுவாள்.

சன்னிதித் தெருவில் அப்பாவின் நண்பர் ரங்கபாஷ்யம் இருந்தார். சாமி கும்பிட வரும்போதெல்லாம் அவர் வீட்டில் டேரா போட்டு விடுவோம். அவர் வீட்டில் எங்கே பார்த்தாலும் எறும்பு மருந்து வீச்சம் அடிக்கும்.

கூடத்தில் ஊஞ்சல் கட்டியிருக்கும். அதில் ஏரோப்ளேன் விளையாட்டு விளையாடுவோம். ஏரோப்ளேனில் டிக்கெட் வாங்காமல் ஏறமுடியாது.

ரங்கபாஷ்யத்தின் கடைக்குட்டிப் பெண் பாக்கி என்கிற பாக்யலக்ஷ்மிதான் டிக்கெட் கொடுப்பாள்.

ரங்கபாஷ்யம் செயின் ஸ்மோக்கர். அவர் குடித்துப் போட்ட 'பாஸிங் ஷோ' சிகரெட் பாக்கெட்டுகளின் அட்டைகளில் தொப்பி போட்ட மனிதன் தலை இருக்கும். அந்த அட்டைகளை மட்டும் கிழித்து கையில் அடுக்கிக் கொள்வாள் பாக்கி.

அவளிடம் டிக்கெட் வாங்கிக்கொண்டு ஏரோப்ளேனில் ஏறிக் கொள்வோம். அவ்வளவுதான்... ஏரோப்ளேனை ஒரு தள்ளு தள்ளிவிடுவாள் பாக்கி.

'ஹோ'வென்று கூச்சல். களேபரம். ஏரோப்ளேன் மேலும் கீழும் படுவேகமாகப் பறக்கும்.

ஏரோப்ளேன் விளையாட்டு முடிந்ததும் கண்ணாமூச்சி. அந்த வீடே கண்ணாமூச்சி விளையாடுவதற்காகவே கட்டிய மாதிரி இருக்கும்.

பின்கட்டில் ஒரு சிறு அறை. அந்த அறைக்குள் ஒரே வெளவால் புழுக்கையாகக் கிடக்கும். வெளவால் நெடி. மேல் கூரையில் வெளவால்கள் தொங்கும்.

அந்த வீட்டில் யாருமே வெளவால்களை விரட்டுவது கிடையாது. வெளவால்கள் வீட்டில் வசிப்பது அதிர்ஷ்டமாம்..

ரங்கபாஷ்யத்தின் குடும்பத்தில் எல்லோரும் நல்ல சிவப்பு. பாக்கிதான் தப்பிப் பிறந்தவள். சரியான கறுப்பு. அவளுடைய அப்பா வழியில் யாரோ ஒரு பாட்டி கறுப்பாம்.

பாக்கியைக் கடுமையாகத் திட்ட வேண்டுமானால் அந்த வீட்டில் இருந்தவர்களுக்கு ஒரே ஒரு வார்த்தை போதுமான

தாக இருந்தது.

''ஏய், கறுப்பி!''

அவ்வளவுதான். பாக்கி அன்றைக்கு முழுவதும் அழுதுகொண்டிருப்பாள்.

''பேசாமல் நானும் இந்த வீட்டில் ஒரு வௌவாலாகவே பிறந்திருக்கலாம். அதுங்க குடும்பமே கறுப்பு'' என்று என்னி

கும். என் அண்ணனுக்கு இயற்கையிலேயே கொடூர புத்தி. ''ஏய், பாக்கி இங்கே வாடி'' என்பான்.

''என்ன?'' என்று வந்து நிற்பாள் பாக்கி.

அவளைத் தொட்டுவிட்டு, கறுப்பு ஒட்டிக்கிச்சோன்னு பார்த்தேன்..'' என்பான்.



டம் பொருமுவாள் பாக்கி.

''வருத்தப்படாதே பாக்கி. கறுப்புதான் அழகு. நீ அழகாதான் இருக்கே...''

''அப்படியா?'' பாக்கி விழிகள் விரியக் கேட்பாள்.

பாக்கியைப் பார்க்கப் பாவமாக இருக்

பாக்கி அழுவாள்.

எங்கள் எல்லோரையும்விட பாக்கிதான் புத்திசாலி. அவளுடைய பள்ளிக்கூட நோட்டுப் புத்தகங்களைக் காண்பிப்பாள். முத்து முத்தான கையெ



**'மெல்ல மெல்லத் தொடலாமா...' படத்தில் அறிமுகமாகியிருக்கும் நீனு கார்த்திகாவோடு...**

**● முதல் படமா? "தமிழில் முதல் படம். மலையாளத்தில் மூனு படம் முடிச்சுட்டேன்." ● இனி தமிழ்தானா...? "என் கேரளாவை எப்படிங்க மறக்க முடியும்?" ● படம் எப்படி? "இளமையான படம். வலிமையான காதல் கதை." ● கோலிவுட் புடிச்சுருக்கா..? "நல்ல உள்ளம் கொண்ட நிறைய பேர் இருக்காங்க. அதனால டபுள் ஓ.கே." ● அஸின்... கோபிகா... பாவனா...? "இவங்க கொடிதானே கோடம்பாக்கத்துல பறக்குது!" ● நீங்க எப்படி? "என் கொடியும் தயார்."**

**- அனு**

முத்து. எல்லாப் பாடங்களிலும் நூற்றுக்குப் பக்கத்தில் வாங்கியிருப்பாள்!

பாக்கி நன்றாகப் பாடுவாள். அழகாகக் கோலம் போடுவாள். ஊருக்கு முன்னால் எழுந்து வாசல் தெளித்துக் கோலம் போடுவாள். நான் திண்ணையில் உட்கார்ந்து வேடிக்கை பார்ப்பேன். சில சமயம் புள்ளிக் கணக்கு மறந்துவிடும். முகத்தில் விழும் முடியை புறங்கையால் விலக்கி யோசிப்பாள். 'அந்த'க் கோலமே அழகாய் இருக்கும்.

''எல்லாத் திறமையும் இருக்கு. என்ன பிரயோசனம்? கடவுள் அவளைக் கறுப்பா படைச்சுட்டான் என்ன செய்ய?'' என்று ரங்கபாஷ்யம் அப்பாவிடம் வருத்தப்படுவார்.

அப்பாவுக்குக் கோபம் வந்து விடும்.

''இவளை மாதிரி சூட்டிகையான பெண்ணைப் பெத்ததுக்கு நீதான் குடுத்து வச்சிருக்கணும்!''

ரங்கபாஷ்யத்தின் புருவங்கள் நெறியும்.

''எல்லாம் சரிதான்! இவளை யார் கட்டிக்குவா?''

அப்பா பதைத்துப் போவார்.

''அப்படிச் சொல்லாதே ரங்கா. அவ காதுல விழுந்துடப் போகுது. அவளுக்குன்னு ஒருத்தன் இனிமேயா பொறந்து வரப் போறான்? ஏற்கெனவே பொறந்தாச்சு. கிருஷ்ணன் நிறம் என்ன? நீலமேக சியாமளவர்ணம்னு அவனோட கறுப்பைக் கொண்டாடுறோம் இல்லியா?''

''கடவுள் என்ன கலர்ல வேணா இருக்கலாம் ரங்கராஜா. பொண் குழந்தை சேப்பா இல்லே மாநிறமா இருந்தாத்தான் கல்யாணம் ஆகும். இப்படி அட்டைக்கரியா இருக்காளே. இவளை எப்படி கரையேத்தப் போறேனோ தெரியலியே...''

அப்பா மௌனமாவார்...! கோயிலுக்குப் போய் மொட்டை போட்டு, காது குத்தி, புதுச்சட்டை போட்டுக் கொண்டு வருவோம். என்னைப் பார்த்து பாக்கி சொல்வாள்:

''கோபாலா, மொட்டை பச்சைக் கலர்ல அழகா இருக்குடா. அதுல வாசனையா

சந்தனம். காதுல ஸ்டார் மின்னுது. மொகம் ரோஸ் கலர்ல டால் அடிக்குது... புதுச் சட்டை போட்ட உடனே திடீர்னு எப்படிடா சேப்பா ஆயிட்டே...''

நான் கூச்சத்துடன் நெளிவேன். உள்ளூர கர்வம் பொங்கும். ''நீதாண்டி அழகு!'' என்பேன். பாக்கி வெட்கப்படுவாள். ஒரு தடவை பாக்கியும் நானும் விளையாடிக் கொண்டே ரைஸ் மில்லைத் தாண்டிப் போய்விட்டோம். நல்ல வெயில் நேரம். குளம். ஐயனார் கோயில். கோயில் தென்னை மரத்தில் காற்றிலாடும் தூக்கணாங்குருவிக் கூடுகள்.

பெரிய முழியுடன் ஐயனார். கையில் கத்தி வேறு. அவருக்குப் பயந்து கொண்டு அந்தப் பிரதேசமே கப்சிப்பென்று இருந்தது.

பாக்கியின் கண்கள் கலங்கியிருந்தன.

''கோபாலா, நான் ஏன் இப்படிப் பொண்ணா பொறந்தேன்? அதுவும் கறுப்பா பொறந்தேன். பேசாம அந்தக் குளத்துல விழுந்து செத்துடலாம் போல இருக்குடா...''

''ஐயோ, பாக்கி! எதுக்காக அப்படிச் சொல்றே?''

''எல்லோருமே என்னை கறுப்பி, கறுப்பிங்கறாங்க. அன்னிக்கு அம்மா சொல்றா. வீட்டை வித்துதான் என்னைக் கரையேத்தணுமாம்!''

பாக்கியைப் பார்க்கப் பாவமாக இருந்தது.

''கவலைப்படாதே பாக்கி. பெரியவன் ஆனதும் நான் உன்னைக் கட்டிக்கிறேன்!''

பாக்கியின் முகம் பிரகாசமாயிற்று.

''நெஜம்மாவா சொல்றே?''

ஓரக்கண்ணால் ஐயனாரைக் கவனித்தேன்.

'படவா! பேச்சை மீறுனே, உன்னை அப்படியே...'

ஐயனார் மீசையுடன் மிரட்டுவது போல் இருந்தது. பக்கத்தில் நின்ற குதிரைகள் கனைத்தன.

'ஆமாம்! நாங்க உன்னைச் சும்மா விட மாட்டோம்...'

பயந்து விட்டேன்.

''பாக்கி! வீட்டுக்குப் போகலாம்!''

அன்றைக்குச் சாப்பிட்ட பிறகு, பாக்கி என் கையில் ஒரு ஜிலேபியைத் திணித்து விட்டுப் போனாள்.

அப்பா காலமான பிறகு அம்மா நடை உடை இல்லாமல் போய் கிராமத்துக்குப் போவது நின்றே போய்விட்டது.

**பு**துசாக கார் வாங்கியிருந்தேன். அம்மா வழக்கப்படி குடும்பத்தோடு அப்பாவின் கிராமத்துக்குப் போனேன்.

காவேரி வறண்டு கிடந்தது.

போகிற வழியில் என் பையன் கத்தினான்.

''அப்பா! அதோ பாருங்க எவ்ளோ பெரிய பொம்மை...''

''அது ஐயனார்டா!'' காரை நிறுத்தினேன்.

**"மக்களுக்கு ரொம்பத்தான் குறும்பு!"**

**"ஏன் அப்படிச் சொல்றே?"**

**"டயாபடீஸ் வந்த சக்கரவர்த்தியை ஜனங்க சர்க்கரைவர்த்தின்னு கொஞ்சுறாங்க!"**

**- அரவக்குறிச்சிப்பட்டி**
**எம்.அசோக்ராஜா**



ஐயனார் சிலை காரை உதிர்ந்து கத்தி இல்லாமல்... ஆனால் அந்தக் கண்களைப் பார்க்க தைரியமில்லாமல் முகத்தைத் திருப்பிக் கொண்டேன்.

குதிரைகள் உடைந்து கிடந்தன. கால் ஒரு பக்கம். தலையொரு பக்கம். காரைக் கிளப்பினேன். வெயில் கொளுத்தியது.

குலதெய்வக் கோயிலில் மனைவியையும் குழந்தைகளையும் விட்டு விட்டு நான் மட்டும் சன்னிதித் தெருவுக்குப் போனேன்.

சன்னிதித் தெரு பாழடைந்து கிடந்தது. உடைந்து சிதிலமான வீடுகள். செடிகள் மண்டிக் கிடந்த பாழ் மனைகள்.

அதோ ரங்கபாஷ்யத்தின் வீடு. வீட்டுக்கு முன்னால் காரை நிறுத்தினேன்.

அந்த வீட்டில் இப்போது யார் இருப்பார்கள்? பாக்கி எங்கே இருப்பாள்?

ஒரு நடுத்தர வயது நபர் திண்ணையில் உட்கார்ந்து விசிறிக் கொண்டிருந்தார்.

''யாரைப் பார்க்கணும்?''

''நான் ரங்கபாஷ்யத்தின் சிநேகிதர் மகன். பல வருஷங்களுக்கு முன்னால் இங்கே அடிக்கடி வருவோம். அவங்கள்லாம் எங்கே?''

''ரங்கபாஷ்யம் இந்த வீட்டை எங்க அப்பாகிட்ட வித்துட்டுப் போயிட்டார். இப்ப யாரும் இந்த ஊர்ல இல்லை...''

''அவரோட கடைசிப் பொண்ணு...''

கொஞ்ச நேரம் அவர் பேசவில்லை.

''அந்தப் பொண்ணுக்கு கடைசிவரைக்கும் கல்யாணம் ஆகலே. ஒரு மாதிரி 'மென்டல்' ஆயிருச்சு. ரோட்ல துணி இல்லாம ஓட ஆரம்பிச்சுடுச்சு. ரங்கபாஷ்யம் அவர் மகன்களோடு இந்த ஊரைக் காலி பண்ணிட்டுப் போகும்போது அந்தப் பொண்ணை அப்படியே ஊர்லயே விட்டுட்டுப் போயிட்டார்...''

''கடவுளே! இப்ப எங்கே அந்தப் பொண்ணு?''

''எங்க சுத்தினாலும் பழக்க தோஷத்துல சாப்பாட்டு வேளைக்கு வந்துடும். மறுபடி ஊர் சுத்தக் கிளம்பிடும். கொஞ்ச நாளா உடம்புல துணி கூட தங்கறதில்லே!''

நாங்கள் பேசிக் கொண்டிருக்கும்போதே தலைக்கு மேல் ஒரு வௌவால் குறுக்கும் நெடுக்குமாகப் பறந்தது.

''இந்த வீட்டில் வௌவால்...''



**குலதெய்வக் கோயிலில் மனைவியையும் குழந்தைகளையும் விட்டு விட்டு நான் மட்டும் சன்னிதித் தெருவுக்குப் போனேன்.**

''ஒரு கூட்டமே இருக்கு. இந்த வீட்டை ரங்கபாஷ்யம் விக்கிறப்ப சொன்னார். வௌவால் இருந்தா அதிர்ஷ்டமாம். துரத்திடாதீங்கன்னு சொன்னார்!''

சிரித்தார்.

வௌவால் அதிர்ஷ்டம். துரத்த மாட்டார்கள். பாக்கியைத் துரத்தி விடுவார்கள்!

''புல்ஷிட்'' என்றேன் ஆத்திரத்துடன்.

''என்ன சொன்னீங்க?'' என்றார் புரியாமல்.

பாக்கியின் தகப்பனார், அவளுடைய அண்ணன்கள், அவளைப் புறக்கணித்து விட்ட நான் உள்ளிட்ட இந்தச் சமூகம் எல்லாவற்றுக்குமாகச் சேர்த்துச் சொன்னேன்: ''மாட்டுச்சாணம்!'' ❑

''ஒலிம்பிக் போட்டியை தங்கள் நாட்டில் நடத்திவிட வேண்டுமென்று ஒவ்வொரு நாடும் போட்டியிட்டுக் களத்தில் குதிக்குமே... அது போல இருந்தது, தமிழ் விழாவை நடத்த தமிழ்ச் சங்கங்களிடையே நடந்த போட்டி. எங்கே என்கிறீர்களா? தமிழ்நாட்டிலில்லை. வட அமெரிக்காவில். வட அமெரிக்காவின் தமிழ்ச் சங்கங்களின் ஆதரவில் (FETNA) இந்த ஆண்டு ஜார்ஜியா மாகாணம் அட்லாண்டா நகரில் நடைபெற்றது அவ்விழா'' என்கிறார் அதில் கலந்து கொண்ட கவிஞர் ஜெய பாஸ்கரன்.

வட அமெரிக்கத் தமிழ்ச் சங்கப் பேரவை- Federation of Tamil Sangams of North America - வையே 'FETNA' என்று சுருக்கமாகவும், செல்லமாகவும் சொல்கிறார்கள் அமெரிக்கத் தமிழர்கள்.




# அமெரிக்காவில் தமிழ் விழா!

வாஷிங்டன், நியூயார்க், நியூஜெர்சி, அட்லாண்டா மற்றும் கனடாவிலுள்ள தமிழ்ச் சங்கங்களையும் சேர்த்துக்கொண்டு கிட்டத்தட்ட நாற்பத்தொரு தமிழ்ச் சங்கங்களின் கூட்டமைப்பாக உருவாக்கப்பட்டது தான் வட அமெரிக்கத் தமிழ்ச் சங்கப் பேரவை (FETNA).

விழாவுக்கு ஆண்களும், பெண்களும், குடும்பங்களும், குழந்தைகளுமாக ஆயிரத்து ஐந்நூற்றுக்கும் மேற்பட்டவர்கள் அமெரிக்காவின் அனைத்து மாகாணங்களில் இருந்தும் வந்து குழுமிவிட்டார்கள். அனைவருக்கும் நுழைவுக்கட்டணம் உண்டு. விழா நடந்த ஜார்ஜியாடெக் என்கிற உயர்கல்வி வளாகத்தின் அரங்கம் கோலங்களாலும் வாழை மரங்களாலும் களை கட்டியது.

ஒவ்வொரு ஆண்டும் அழைப்பதைப் போலவே இவ்வாண்டும் சிலம்பொலி செல்லப்பன், தமிழருவி மணியன், வைரமுத்து, கோபிநாத், (நீயா நானா), அறிவியல் அறிஞர் மயில்சாமி அண்ணாதுரை, தமிழ் இணையப் பல்கலைக்கழகத் துணைவேந்தர் நக்கீரன் போன்றோருடன் நானும் அழைக்கப்பட்டிருந்தேன். ஜீவா, பசுபதி, அனுராதா ஸ்ரீராம் போன்ற திரைக் கலைஞர்களோடு, ஜோதிக் கண்ணன் எனும் அதியற்புதமான சிலம்

பாட்டக் கலைஞரும் அழைக்கப்பட்டிருந்தார். தமிழறிஞர் இரா.திரு.முருகன் (புதுச்சேரி) அழைக்கப்பட்டிருந்தவர்களில் முதன்மையானவர். எதிர்பாராதவிதமாக அவர் மறைந்துவிட்டதால், அவரை நினைத்து அவ்வப்போது மனம் கலங்கி வருத்தப்பட்டுக் கொண்டிருந்தார் FETNA தலைவர் டாக்டர் முத்துவேல் செல்லையா.

ஷாண்டர் நிகழ்த்திய இலங்கை இனப் படுகொலை பற்றிய ஆய்வுரையை 'சர்வதேச மனசாட்சி' என்றே குறிப்பிடலாம்.

'வென்றாக வேண்டும் தமிழ்' எனும் தலைப்பில் என் தலைமையில் நடந்த கவியரங்கத்துக்கு ஒன்றரை மணி நேரம் ஒதுக்கியிருந்தார்கள். பங்கேற்ற எட்டுக்



மூன்று நாள் நிகழ்ச்சிகளுக்காக தங்களுக்குத் தாங்களே பயிற்சியளித்துக் கொண்டு, பல்வேறு விதமான நிகழ்ச்சிகளை வழங்கி, பார்வையாளர்களை உண்மையிலேயே வியக்கச் செய்துவிட்டார்கள் அமெரிக்கத் தமிழர்கள். வாஷிங்டன் சங்கர பாண்டியன், பீற்றர் இரோனிமூஸ் இருவரும் சேர்ந்து திட்டமிட்டு அரங்கேற்றிய அறிவியல் வினாடி வினா நிகழ்ச்சிக்கும், அட்லாண்டா செல்வக் குமார் எழுதி அரங்கேற்றிய 'பிரதிமை' எனும் நாடகத்துக்கும், ஈழத்தமிழர்களின் துயரங்களை எதிரொலித்த பா.சுந்தர வடிவேல் எழுதி இயக்கிய 'என்ன செய்யப் போகிறாய்?' எனும் நாடகத்துக்கும் ஏகப்பட்ட வரவேற்பு.

மனித உரிமைப் போராளியும், அமெரிக்கப் பெண்மணியுமான ஹெலன்

கவிஞர்களும் அமெரிக்காவில் இருப்பவர்கள். சும்மா சொல்லக்கூடாது... கவிதைகள் மட்டுமல்ல; அவர்களின் நேர உணர்வும் வரவேற்கப்படக் கூடியதாகவே இருந்தது.

தமிழ் அன்னை என்னைப் பார்த்து பல கேள்விகள் கேட்பதைப் போல என் கவிதையை எழுதியிருந்தேன். பதினைந்து நிமிடங்கள் அரங்கேறிய அக்கவிதையின் முடிவில், அரங்கில் இருந்த அவ்வளவு பேரும் எழுந்து நின்று தொடர்ந்து கரவொலி எழுப்பியது, எனக்கொரு புதிய நெகிழ்வூட்டக்கூடிய அனுபவம்.

''வெற்றிலைக் குன்று'' எனும் / வியத்தகு தமிழ்ப் பெயரை / பத்தலக் குண்டு என்கிறாயே! / பாவி நீ விளங்குவாயா? / திருவள்ளுவர் தெருவை / T.V.Street என்கிறாயே - உன் /TV மோகத்துக்கொரு / தீர்வே கிடையாதா?

/ அடையாறு என்பதை / அடையார் என்கிறாயே / அடைய வேண்டியதை / அடையவே மாட்டாய் நீ / என்று நீண்ட என் வசன கவிதையின் பெரும்பான்மை யான வரிகளுக்குக் கிடைத்த வரவேற்பும், கரவொலியும் அமெரிக்கத் தமிழர்களின் தமிழுணர்வையே எதிரொலித்தது.

ஒவ்வொரு ஆண்டும் FETNA தமிழ் விழாவில் ஒரு பிரக டனத்தை மையப் படுத்தியே நிகழ்ச்சி களை நடத்துகிறார் கள். அண்ணா நூற் றாண்டு விழாவாக அரங்கேறிய இவ் வாண்டு தமிழ்விழா, ''உணர்வு கொள் வோம், உரிமை காப் போம்'' எனும் முழக் கத்தை அடிப்படையாகக் கொண்டிருந்தது. ஒவ்வொரு ஆண்டும் தமிழ் விழாவில் வெளியிடப்படுகிற மலரில் மிகவும் ஆய்வு பூர்வமான, செழுமையான படைப்புகளை உலக அளவில் படைப்பாளிகளிடமிருந்து திரட்டி வெளியிடுவதை வழக்கமாகக் கொண்டிருக்கிறார்கள். இவ்வாண்டு மலரை விழா மேடையில் தமிழருவி மணியன் வெளியிட, அதைப் பெற்றுக் கொள்கிற வாய்ப்பு எனக்குக் கிட்டியது. மிகவும் பொருட்செலவில், உயர்ரக தாளில் சொந்தச் செலவில் அச்சடித்து, அனுப்பி வைக்கிறார், மதுரை மீனாட்சி மருத்துவ மனை நிறுவனர், மருத்துவர் ந.சேதுராமன்.

அடுத்த ஆண்டு தமிழ் விழா - 2010 ஜூலை முதல் வாரத்தில் கனெக்டிக் நகரில் நடைபெற இருப்பதால் அதற்கான பணிகளை இப்போதே தொடங்கிவிட்டார், பேரவையின் தலைவர் டாக்டர் முத்துவேல் செல்லையா.





**"ஒலிம்பிக் போட்டியை நடத்த உலக நாடுகள் போட்டா போட்டி போட்டுக்கொள்வது போல, அமெரிக்கத் தமிழ்ச் சங்கங்களிடையே தமிழ் விழாவை நடத்த போட்டி நடக்கிறது!"**

அட்லாண்டா விமான நிலையத்தில் வாஷிங் டனுக்கு என்னை வழி யனுப்பும்போது, ''இது மாதிரி நாங்க சந்தோஷமா இருந்து கூட்டம் கூட்டமாக நம்ம ஜனங்களைப் பார்க்க இன்னும் ஒரு வருஷம் காத்திருக்கணும்'' என ரவிக்குமார் (விழா பொறுப்பாளர்) சொன்னபோது, அவரது குரல் உடைந்திருந்தது.

**- கவிஞர் ஜெயபாஸ்கரன்**

# அந்த மூன்று



• மௌனாஞ்சலி

அமெரிக்க ஜனாதிபதி ஆப்ரகாம் லிங்கன், ஒரு சமயம் காரில் சென்ற போது, வழியில் நின்ற கறுப்பின மனிதர் ஒருவர் தலையைத் தாழ்த்தி, தொப்பியை எடுத்து மரியாதை செய்தார். பதிலுக்கு லிங்கனும் அதே போல் அந்த மனிதருக்கு மரியாதை செய்தார்.

''போயும் போயும் அவருக்கா மரியாதை செய்தீர்கள்?'' எனக் கேட்டார் அருகில் இருந்த நண்பர்.

''என்னை விடப் பணிவுள்ளவர்கள் இந்தத் தேசத்தில் வேறு ஒருவரும் இருக்கக் கூடாது என்பதற்காக அப்படிச் செய்தேன்!'' என்றார் லிங்கன்.

**1910**-ம் ஆண்டில் விநாயக தாமோதர சாவர்க்கார் விசாரணைக் கைதியாக லண்டனிலிருந்து இந்தியாவுக்குக் கொண்டு வரப்பட்டார். பிரயாணத்தின் போது, தான் எப்படியாவது தப்பித்து பிரெஞ்சுத் துறைமுகமான மார்செயில்ஸில் கரையேறிவிடுவதாகவும், அங்கே குறிப்பிட்ட நேரத்தில் காரை வைத்துக் கொண்டு தயாராக இருக்கும்படியும் பாரீஸ் நகரிலிருந்த வ.வே.சு. ஐயருக்கும், மேடம் காமாவுக்கும் ரகசியமாகத் தகவல் அனுப்பியிருந்தார் சாவர்க்கார்.

சொன்னபடியே தப்பித்து பிரெஞ்சு மண்ணை மிதித்துவிட்ட சாவர்க்காரை உடனடியாக ஏற்றிக்கொண்டு போக, அங்கே வ.வே.சு. ஐயரும், மேடம் காமாவும் இல்லை. பின்னாலேயே 'திருடன் திருடன்' என்று துரத்தி வந்த ஆங்கிலேயப் போலீஸ் மீண்டும் சாவர்க்காரைப் பிடித்துக்கொண்டு போய்க் கொண்டிருந்தார்கள். மூன்று நிமிடம் அங்கே தாமதமாக வந்த வ.வே.சு. ஐயரும், மேடம் காமாவும், ''மூன்று நிமிடத் தாமதம்



• மூன்று நிமிட தாமதத்தால்...

இந்திய விடுதலைப் போரின் கருவையே சிதைத்து விட்டதே!'' என்று கதறி அழுது விட்டனர்.

**- 'சரித்திரத்தை மாற்றிய சதிவழக்குகள்' என்ற நூலிலிருந்து.**


★ காத்திருப்பேன்...

**நா**டகக் கம்பெனி முதலாளி ஒருவர், அறிஞர் பெர்னார்ட் ஷாவை சந்தித்துக் கேட்டார்:

''ஐயா! உங்கள் நாடகத்தை எங்கள் நாடகக் கம்பெனி மூலம் நடத்த விரும்பு கிறோம். ஆனால் எங்கள் கம்பெனி மிகவும் சிறியது. அதனால் நீங்கள் அதிகம் பணம் எதிர்பார்க்கக்கூடாது!''

பெர்னார்ட்ஷா, அமைதியாகச் சொன்ன பதில் இது:

# நிமிடங்கள்!

''நாடகத்துக்கு என்னால் குறைந்த பணம் பெற முடியாது. ஆனால் உங்கள் கம்பெனி பெரியதாகும் வரை நான் காத்திருக்கிறேன். அப்போது நான் கேட்கும் தொகையைக் கொடுத்துவிட்டு நாடகத்தைத் தாராளமாக நடத்திக் கொள்ளுங்கள்!''


★ எளியோர்க்கும் எளியேன்...

**ம**காத்மா காந்தி இறந்த தினத்தன்று (ஜனவரி 30, 1948) இலங்கை வானொலி நிலையத்தில் ஒரே அல்லோலகல்லோலம். அப்போது ஒலிபரப்பு அதிகாரியாக இருந்த ரிச்சர்ட் வீரசூரியா என்ன செய்வதென்று தெரியாமல் தவித்துப் போனார்.

இந்திய வானொலியோ, சோகத்தை ஒலிபரப்பிக் கொண்டிருந்ததோடு இடையிடையே நேரு முதலிய தலைவர்களின் பேச்சுக்களையும் ஒலிபரப்பிக் கொண்டிருந்தது.

இலங்கை வானொலியில் அப்போது அந்த வசதிகள் இருக்கவில்லை. அதிகாரிகளெல்லாம் மண்டையை உடைத்துக்கொண்டார்கள். கடைசி கடைசியாக இந்த முடிவுக்கு வந்தார்கள்.

அடுத்த 24 மணி நேரத்துக்கு எந்தவிதமான நிகழ்ச்சியையும் ஒலிபரப்பாமல் ரேடியோ நிலையத்தை மூடிவைப்பது.

உலகத்தில், காந்திக்கு இந்தவிதமாக 'மௌனாஞ்சலி' செய்த நாடும், வானொலியும் இலங்கைதான்!

**- ஏ.கே. நாசர்,**
**ஜே.ஆர்.பட்டினம்**




பாடியபடி பெரும் மக்கள் கூட்டத்தைத் திரட்டினார் தாகூர். திரண்டிருந்த மக்கள் கூட்டத்ினருடன், ராக்கி கயிற்றைக் கட்டி, சகோதர உணர்வினைப் பரிமாறிக் கொண்டாராம்; வங்கப் பிரிவினை நிகழ்ந்த அக்டோபர் 16, 1905-ல். உடைந்திருந்த மனங்களில் ஒருமை உணர்வை ஏற்படுத்தித் தேசிய நீரோட்டத்தில் கலக்கச் செய்த நிகழ்வுகள் வரலாற்றில் ஏராளம். நம் தேசத்தின் அரசியல் வரலாற்றினை பழங்காலம், இடைக்காலம், நவீன காலம் என வகைப்படுத்தி வலையில் உணர்வூட்டியுள்ளது www.indiaheritage.org

''வங்கத்தின் மண், தண்ணீர், காற்று புனிதப்படுத்தப்படட்டும்'' - ஏறத்தாழ இந்தப் பொருள் கொண்ட வங்க மொழிப் பாடலொன்றை இயற்றி, சாலைகளில் இதைப்

# பெஸ்டிவல்ஸ்

குதிரை ஒன்று இனிப்பு மழையில் குளிப்பாட்டப்(!)படுகிறது. பின்னர் அப்பகுதியின் அரச வம்சத்தின் அப்போதைய பிரதிநிதி அதன் மீது ஏறி திருவிழா மைதானத்தைச் சுற்றி வருகிறார். என்ன திருவிழா? ஹிமாச்சல பிரதேசம், லாஹல் பள்ளத்தாக்குப் பகுதியில் அமைந்துள்ள திரிலோகநாதர் கோயிலில் நடைபெறும் 'போரி' என்னும் திருவிழாதான் அது. திருவிழாவில் பாலும், பால் பொருட்களும்தான் தேர்ட் ஹீரோ. (செகண்ட் ஹீரோ யாரா? இனிப்புல குளிச்ச குதிரைதான்!)

திருவிழாவன்று காலையில் பாலாலும்,





## க்யூட் கதை

**கே.**ஜி. வகுப்பொன்றில் குழந்தைகள் ஆசிரியையின் மேற்பார்வையில் ஓவியம் வரைந்து வண்ணம் தீட்டிக் கொண்டிருந்தனர். குறும்பு செய்து கொண்டிருந்த குட்டி குட்டி தேவதைகளிடையே சுற்றி வந்த ஆசிரியை, ஆழ்ந்து எதையோ வரைந்து கொண்டிருந்த ஒரு குழந்தையின் அருகில் நின்றார்.

"அப்படி என்ன வரையறே...?" என்ற ஆசிரியை குழந்தையின் பதிலில் திகைத்துப் போனார். "நான் கடவுளை வரையறேன்."

"ஆனால் இதுவரை யாரும் கடவுளைப் பார்த்ததில்லையே..."

"இன்னும் ஒரு நிமிஷத்திலே பார்க்கலாம்... நான் வரைஞ்சு முடிச்சதும்..."

## விளக்கம் கேக்காம சிரிங்க...

"வலையிலும் உண்டுதான் சிரிக்க வைக்க
தலைகீழாய் யோசிப்போர் சங்கம்"

திருவள்ளுவருக்கோ, சாலமன் பாப்பையாவுக்கோ மேற்சொன்ன குறளோடு எந்தத் தொடர்பும் இல்லை என உறுதியளிக்கிறோம்!




# கம்மிங் ஸூன்

பாலில் செய்த ஒரு வகை இனிப்புப் பொருளாலும் திரிலோகநாதருக்கு அபிஷேகமாம். இரவில் வெண்ணெய் ஊற்றி பெரிய விளக்கொன்று ஏற்றப்படுமாம். மக்கள் கொண்டு வந்து விடும் வெண்ணெயால் விடிய விடிய எரிந்து கொண்டிருக்குமாம் அந்த விளக்கு.

இதுபோன்று இந்தியாவெங்கும் கொண்டாடப்படும் திருவிழாக்கள், வட்டார விழாக்கள், பொதுவான விழாக்கள் (மலர்க் காட்சி, படகுத் திருவிழா போன்றவை) குறித்துத் தொகுத்து வைத்திருக்கிறது www.festivalsofindia.in. இந்த வலைத் தளத்தில் இன்னொரு ஹைலைட்: மாஸ் ஹீரோக்களுக்குக் கொடுப்பது போல், 'நியூ ஃபெஸ்டிவல்ஸ் கம்மிங் ஸூன்' என்று ட்ரெய்லரோடு தந்திருப்பது.

**- ஜான்ஸிராணி**

# அய்யனார்



தேனாண்டாள் ஃபிலிம் பி.எல். தேனப்பன் யாருன்னு தெரிகிறதா...? கமலஹாசன் நடித்த பஞ்சதந்திரம், காதலா காதலா, பம்மல் கே.சம்பந்தம் உள்ளிட்ட காமெடி படங்களைத் தயாரித்து வெற்றிக்கொடி நாட்டிய தயாரிப்பாளர். இயக்குநர் சேரனின் ஆத்ம நண்பர். இவர் தற்போது ஸ்ரீராஜலட்சுமி ஃபிலிம் (பி) லிட்க்காகத் தயாரிக்கும் படம்தான் அய்யனார்.

''ஏன் ஸார் படத்துக்குப் பெயர் அய்யனார்?'' - கேட்டால், ''கிராமத்துல ரொம்பத் துடியான சாமின்னா அது அய்யனார்தான். இன்னும்

# கச்சேரி ஆரம்பம்

ஒருகாலத்தில் வித்தியாசமான கதையோடு அலைந்துகொண்டிருந்த கோடம்பாக்க இயக்குநர்களின் நம்பிக்கைத் திறவுகோல் 'சூப்பர் குட் ஃபிலிம்ஸ்' ஆர்.பி.சௌத்ரி. புதுவசந்தம் தொடங்கி ஏராள வெற்றிப் படங்களைக் கொடுத்தவர். இன்றைக்கு முன்னணியில் இருக்கும் கே.எஸ்.ரவிக்குமார் முதல் இயக்குநர் விக்ரமன்... வரை இவரால் வெளிச்சத்துக்கு வந்தவர்கள் ஏராளம். தமது மகன் ஜீவாவை ஹீரோவாக வைத்து இவர் தயாரித்த தித்திக்குதே, ஆசை ஆசையாய், ஈ படங்களைத் தொடர்ந்து மிகவும் பிரமாண்டமாகத் தயாரிக்கும் படம், 'கச்சேரி ஆரம்பம்'. இதன் இயக்குநர் திரைவாணனிடம் பேசியபோது, ''எந்தவொரு விஷயத்தையும் ரொம்ப சூடா ஆரம்பிக்கணும்னா இனிதான், 'கச்சேரி ஆரம்பம்'னு சொல்ற ஒரு பேச்சு வழக்கு இருக்கு. அப்படி ஹீரோ வில்லன்களுக்கு சவால் விட்டு ஜெயிக்கிற கதைதான் 'கச்சேரி ஆரம்பம்'.

என்னோட குரு பூபதி பாண்டியன்கிட்ட கத்துக்கிட்ட காமெடி... எனக்கே உரித்தான சென்டிமென்ட், சூப்பர் குட் ஃபிலிம்ஸுக்கே உரிய கதை அமைப்போட திரைக்கு வர இருக்கு. கண்டிப்பா ஜெயிக்கும். ஏன்னா சௌத்ரி ஸாரோட கணிப்பு என்னைக்குமே தப்பாகாது'' என்கிறார். ●





பெரிய தெய்வங்களுக்கு இணையா கிராமத்து மக்களாலும் ஆய்வாளர்களாலும் முன்னிறுத்தப்படுற ஒரு தெய்வம் அய்யனார். அய்யனாரோட அருவா எப்படி பிரபலமோ அதே அளவுக்கு அவர் மக்கள் மீது காட்டுற அக்கறையும் ரொம்ப ஃபேமஸ். என்னதான் ஐ.டி. நம்மளை ஆட்டிப் படைச்சாலும் அய்யனாருக்கு மொட்டை போட்டு காது குத்தாத சாஃப்ட்வேர்காரங்க இருக்க மாட்டாங்க. அய்யனாரோட அன்பையும், அருவாவையும் எடுத்துக்கிட்டு ஒரு கதை பண்ணிருக்கோம். அதனால பேர் அய்யனார். மற்றபடி கதை, நகரம், கிராமம், மாநகரம்னு மாறி மாறி நகருது'' என்கிறார் தேனப்பன்.

*சா...பூ...த்ரி...* இது விளையாட்டு இல்லைங்க. படத்தோட பெயர்.

* அறிமுக இயக்குநர் அர்ஷத்கான் இயக்கும் படம்

* 'யாவரும் நலம்', 'மனதோடு மழைக்காலம்...' படங்களின் உதவி இயக்குநர். ஏராளமான விளம்பரப் படங்களின் இயக்குநர்.

* படத்தோட பேர் விளையாட்டா இருக்கே என்றால், ''இது காமெடி கலந்த ரொமாண்டிக் படம்'' என்கிறார் அர்ஷத்கான்.

* சாஃப்ட்வேர் ஃபீல்டில் வேலை பார்க்கும் மூன்று இளைஞர்களின் காதல்தான் படத்தின் மையம்.

* முழுக்க முழுக்க சென்னையில் மட்டுமே படப்பிடிப்பு.

* இசை - அப்பாஸ் ரஃபி, ஏ.ஆர்.ரஹ்மானின் உதவியாளர். ஆயுள்ரேகை படத்தின் இசையமைப்பாளர்.

* மூன்று ஹீரோக்கள், ஐந்து கதாநாயகிகள். அக்ஷா - இலங்கையைச் சேர்ந்தவர். உஜ்ஜயினி - பிரபல பின்னணிப் பாடகி.

* இயக்குநர் அர்ஷத்கான், தயாரிப்பாளர் ராஜேஷ் கண்ணா - இருவரும் ஒன்றாய்ப் படித்தவர்களாம்.

- ஸ்ரீவித்யா





பாக்ஸ் என்கிற சிறப்புப் பகுதியில் அமர்ந்து ஃபெடரரின் வெற்றியை நேரில் பார்த்திருக்கிறார். ''நான் ஃபெடரரின் வெறித்தனமான ரசிகன். அடுத்த முறை அவரை அருகில் சென்று பார்த்து ஹாய் சொல்லவேண்டும்'' என்கிறார். மைக்கேல் ஜாக்ஸன் திட்டமிட்டிருந்த லண்டன் இசை நிகழ்ச்சிக்கு சச்சினும் டிக்கெட் வாங்கியிருந்தார். அது நிராசை

# 'டெஸ்ட்' காதலன்

**ச**ச்சின் அறிவித்துவிட்டார். ''15,000 ரன்கள்; 2011 உலகக்கோப்பை; இரண்டையும் வென்றுவிட்டால் பேட்டைக் கீழே வைக்கத் தயார்.'' கவாஸ்கர் மிரட்டியிருக்கிறாராம் - ''15,000 டெஸ்ட் ரன்கள் அடிக்காமல் ஓய்வு பெற்றால் உன்னை வெளுத்து விடுவேன்'' என்று. குழந்தைபோல் சொல்கிறார் சச்சின். டெண்டுல்கர் இதுவரை 12,773 ரன்கள் அடித்திருக்கிறார்; 129 டெஸ்டுகளில். வருடத்துக்கு ஆயிரம் ரன்கள் என்று கணக்கு வைத்தால்கூட சச்சின் இன்னும் குறைந்தது 3 வருடங்கள் ஆடுவார். சச்சின் ரசிகர்களுக்கு இதைவிடவும் சுவையான செய்தி ஒன்று உண்டா என்ன?

**இ**ந்த இரண்டு மாத ஓய்வின் பெரும் பங்கை லண்டனில் கழித்திருக்கிறார் சச்சின். லண்டனில் மேடம் டுஸ்ஸாட்டிலுள்ள அவர் மெழுகு பொம்மையை நேரில் சென்று பார்த்து ரசித்திருக்கிறார். விம்பிள்டன் இறுதிப்போட்டியில், ராயல்

யாகிப்போனது. '96ல் ஜாக்ஸன் மும்பை வந்திருந்தபோது சச்சின் டைட்டன் கோப்பையில் ஆடிக்கொண்டிருந்தார். அந்த முறையும் தவறவிட்டுவிட்டார். ஹாரி பாட்டர் ஹீரோ டேனியல் ராட்கிளிஃபையும் சந்தித்திருக்கிறார். 2007 இங்கிலாந்து சுற்றுப்பயணத்தில் ரசிகரோடு ரசிகராக நின்று சச்சினிடம் ஆட்டோகிராஃப் வாங்கியிருக்கிறார் டேனியல்.

**சா**துரியமாக 20-20 அணியிலிருந்து கழன்றுவிட்டார் சச்சின். ''நான் அணியின் பலவீனமாக இருந்துவிடப்போகிறேன்'' என்கிறார். பணத்துக்காக டெஸ்ட் கிரிக்கெட்டைப் புறக்கணிக்கிறார்களே என்றால், ''ஆறு வயதுமுதல் நான் கிரிக்கெட் பயிற்சி பெறுகிறேன். நிச்சயம் கிரிக்கெட்டினால் நிறைய சம்பாதிக்கலாம் என்று எண்ணி இந்த விளையாட்டில் ஈடுபடவில்லை. ரன்கள்தான் எனக்கு முக்கியம். கோடிகள் அல்ல'' என்கிறார் இந்த டெஸ்ட் காதலன். இவ்வளவு சொன்னாலும் இந்திய கிரிக்கெட் அணியில் சச்சின்தான் அதிக வருமான வரி கட்டும் வீரர். வருடத்துக்கு 8 கோடி!





எதுவும் பேசாமல் ஒரு கவரை எடுத்துக் கொடுத்தார். பிரித்துப் பார்த்தால் - என்னால் நம்பவே முடியலை. அதில் இருபதாயிரம்





4

''**வீ**ணா கலவரப்படாதே. எல்லாம் நல்ல சேதிதான். ஆனா, எப்படி நிறைவேறப் போறதுன்னுதான் ரொம்ப பயமாயிருக்கு.''

நடந்தது அத்தனையையும் கேட்டு விட்டு, சாரதம் பெருசா சிரிச்சா. 'என்ன வோன்னு நினைச்சேன்? நாம்பளா முயற்சி பண்ணினோம். தானே ஏதோ நடந்துண்டு ருக்கு! மேனேஜர் சொன்னதுபோல அம்பாள் கைவிட மாட்டாள். அவ காட்டற பாதையிலே நம்பிக்கையோட பயணிப் போம். வழியில் கல்லிருந்தாலும் முள்ளி ருந்தாலும் நகர்த்திவிட்டுட்டு நடப்போம். வாங்கோ சாப்பிடலாம். இலையைப் போட்டு வச்சு அப்பத்திலேருந்து காத் துண்டிருக்கேன்.'

**ம**றுநாள் காலை... மூலப்பத்திரத்துடன் மேனேஜர் முன்னால் போய் நின்றேன்.

ரூபாய் பணம் இருந்தது.

'என்னோட ஆப்த நண்பர் கிருஷ்ண ஸ்வாமி ஐயர்னு பெரிய வக்கீல். பூர்வீகம் வால்குடி. இங்கேதான் திருவல்லிக்கேணி பெரிய தெருவில் இருக்கார். காஞ்சி மடத்து மேலே அதீத ஈடுபாடு - பக்தி. அவர்கிட்டே உங்க நெலைமையை எடுத் துச் சொன்னேன். எந்தத் தயக்கமுமில்லாம

# சங்கராபுரம்



இருபதாயிரத்தைத் தூக்கிக் கொடுத் துட்டார். 'இது கடன்தான். வட்டி கிடையாது. முடிஞ்சபோது கொஞ் சம்கொஞ்சமா திருப்பிக் கொடுக்கச் சொல்லியிருக்கோ. ஒரு அவசரமு



மில்லே' ன்னு சொன்னார். என்ன சந் தோஷம்தானே?'

'பரம திருப்தி. இந்த உதவிக்கு உங் களுக்கும், அந்த வக்கீலுக்கும் என்ன கைமாறு பண்ணப்போறேன்னு தெரியலே! ஒரு சந்தேகம். பாக்கி பத்தாயிரம்தானே குடுக்கணும்! எதுக்கு இன்னொரு பத் தாயிரம்?

'சொந்தக் கட்டடம்னு ஆனப்புறம் தொழிலுக்கு ஏத்தாப்போலே கொஞ்சம் பார்வையா, வசதி பண்ணிக்க வேண் டாமா? இன்னைக்கு சாயங்காலமா சிவில் காண்ட்ராக்டர் உங்களை வந்து பார்ப்பார். கட்டடத்தைச் சுத்திக் காண்பிங்கோ! அவர் தேவையானதைப் பண்ணுவார்.'

நம்பவே முடியவில்லை. சினிமாவில் நடப்பதுபோல அசுர வேகத்தில் காரியங் கள் நடைபெற்றன. பத்திரம் ரிஜிஸ்டர்

**" 'பாத்திரம் அறிந்து பிச்சையிடு. கோத்திரம் அறிந்து பெண்ணைக் கொடு'ன்னு சொல்வா. ஜாக்கிரதையா நடந்துக்கோ!"**

ஆகி, வீடு கைக்கு வந்தது. அடுத்த நாளே காண்ட்ராக்டர் ராமஜெயம் வந்து குறுக்கும் நெடுக்கும் அளவெடுத்து, ஏதேதோ கணக்குப் போட்டுவிட்டுச் சொன்னார்:

'நல்ல வேளையா பெரிய முற்றம் இருக்கு. அதுக்கு தற்காலிகமாக ஒரு கொட்டகை போட்டுக் கொடுத்துடறேன். பக்கத்துச் சந்து வழியா ஒரு வாசலும் நிலையும் வச்சுடலாம். தொடர்ந்து உங்க தொழிலைச் செய்துக்கலாம். இன்னும் ரெண்டு மாசத்திலே பாருங்க... உங்க

டால்மியாபுரம் கணேசன்

ஹோட்டல் முகப்பு எப்படியிருக்குன்னு... நீங்களே அசந்து போயிடுவீங்க!'

ராமஜெயம் சொன்னது போலவே எல் லாம் நடந்தது. சாப்பாட்டு ஹால் அழகாக அமைந்துவிடவே அதுக்கு ஏத்த மாதிரி டேபிள், சேர், மற்ற அலங்காரங்களெல் லாம் தேவைப்பட்டன. மடத்து மேனேஜர் வந்து பார்த்துவிட்டு நிலைமையைப் புரிந்துகொண்டு அதற்கும் ஏற்பாடு செய் தார்; கடனாகத்தான்.

ஒரு நல்ல நாள் பார்த்து புதுப்பித்த இடத்தில் தொழிலைத் தொடங்கினோம். வக்கீல் ஸ்ரீ கிருஷ்ணஸ்வாமி அய்யர், மடத்து மேனேஜர் எல்லோரும் குடும்ப சமேதராய் வந்து வாழ்த்தினார்கள்.

எல்லாமாகக் கணக்கு பார்த்ததில் முப் பத்தைந்தாயிரம் கடன் வந்து விட்டது. அதை என் முகத்திலேயே படித்துவிட்டாள் சாரதம்.

'கடன் ஜாஸ்தியாயிடுத்தேன்னு கலக் கமாயிருக்கா? பயப்படாதேள்னா! பாருங்கோ - இன்னும் ரெண்டே வரு ஷத்திலே எல்லாக் கடனையும் அடைச்சுக் காட்றேன்' - சொடக்குப் போட்டுச் சொன் னாள்.

"குழந்தைகள் மூணுபேரையும் பள்ளிக்கூடத்திலே சேத்தாச்சு. மூணு பேருக்கும் குரல் நன்னாயிருந்தது. ஆசைப் படறதுகளேன்னு சங்கீத வகுப்பிலே சேத்துவிட்டோம்.

ஒழிஞ்ச நேரத்திலே கல்யாணம் கார்த்திக்கு முறுக்கு, அதிரசம், பருப்புத் தேங்காய், பக்ஷணம் எல்லாம் பண்ணிக் குடுக்கலாம்னு தோணித்து.

அந்த முயற்சிக்கும் நல்ல பலன் கிடைச்சது. ஒரு முயற்சி வெற்றியானா, அடுத்தடுத்த யோசனை தானா வரும். அதுவும் முதல் முயற்சியே வெற்றின்னா அது பகவானோட அனுக்ரகம்; பெரியவா ளோட ஆசிர்வாதம்! அவ்வளவுதான் சொல் லலாம். அதனால்தான் அடுத்த யோச னையும் வந்தது.

நாமளே கல்யாணங்களுக்கு காண்ட் ராக்ட் எடுத்துச் செஞ்சு குடுத்தா என்னன்னு தோணித்து. தொழில் தெரிஞ்ச நல்ல சமை யல்காரா நாலு பேரைச் சேத்துண்டு 'ஸ்ரீ சங்கரா மேரேஜ் கேடரர்ஸ்'னு ஆரம்பிச் சேன். இந்தத் தொழில் மத்ததைவிட அமோகமா போச்சு. ஒரே வருஷத்திலே கடன் எல்லாம் அடைஞ்சுபோச்சு.

# அருள்வாக்கு



உடல், உடை இவற்றுக்கு மேலாக ஒன்று இருக்கிறது. அதுதான் உள்ளம், மனம் என்பது. மனச் சுத்தம், உள்ளத் தூய்மைதான் மிக மிக முக்கி யம். அது இல்லாமல் உடம்பும், உடுப்பும் எவ்வளவு தூய்மை யாக இருந்தாலும் பயனே யில்லை. மனசிலே அழுக்குப் படியாமல் அதை அவ்வப் போது தேய்த்துக் கழுவிக் குளிப்பாட்டிக் கொண்டே இருக்கவேண்டும்.

மனசுக்கு ஏற்படுகிற அழுக்கு என்பது என்ன? தப்பு, தவறு செய் வதுதான் உள்ளத்துக்கு அழுக்கு. நாம் செய்கிற காரியங்களில் தவறு ஏற்படக்கூடாது. அதா வது கெட்ட நோக்கங்களுக் காகக் காரியம் செய்யவே கூடாது.

ஆனாலும் காரியம் என்று வந்துவிட்டால் நல்லதைச் செய்கிறபோதுகூட அதிலே சில தப்பு, தவறுகள் நேர்ந்து விடலாம். இதனால் பெரிய குற்றம், அதாவது தோஷம்

பெரியவா அனுக்ரகத்திலே காலம் அமோகமா ஓடித்து. ஒவ்வொரு மாசமும் மடத்து உண்டியல் கலெக்ஷனை காஞ்சி புரத்துக்கு அனுப்பறதுக்குத் தவறவே யில்லை.''

கிருஷ்ணமூர்த்தியின் குரலில், விவரிக்க இயலாத உணர்வுகள் பெருகி வழிந்தன.

"அதுக்கு அப்புறம் பெரியவாளை நீங்க போய்ப் பார்த்தேளா?'' - பூரணி குறுக்கிட் டாள்,

''ம்... அடிக்கடி போய்ப் பார்ப்பேன். இருந்தாலும், குறிப்பா சொல்ற தருணம் அதுல இல்லை. ஆனா மூத்த பெண்ணோட கல்யாணத்தை நிச்சயம் பண்ணி பத்திரிகையோட போய் நமஸ்காரம் பண்ணேன். பூஜைக்குப் போற சமயம் அது. இருந்தாலும் ஒரு நிமிஷம் எனக்காகத் தாமதிச்சா. நான் சொல்றதுக் குள்ள பெரியவாளே பேசினா:

'தொழில் நன்னா நடக்கிறதா? பொண்ணுக்குக் கல்யாணமா? சந்தோஷம். எடத்தை நன்னா பாத்துதானே நிச்சயம் பண்ணினே!

**"நீ கொஞ்சம் அவசரப்படறியோன்னு தோணுது!"**

இல்லை. ரொம்பப் பெரியவர்கள்கூட எவ் வளவோ நல்ல காரியங்கள் செய்கிறபோது அவர்களையும் கொஞ்சம் சறுக்கிவிட்டிருக் கிறது. நாமே எல்லாம் செய்துகொள்ள முடியும் என்று கர்வப்படாமல், பகவான் துணையால்தான் எதையும் சாதிக்க முடியும் என்று நாம் உணருவதற்காகவே இப்படிச் சில தவறுகள் நேர்ந்து விடுகின்றன. இம்மாதிரி சமயங்களில் நீங்கள் பகவானை வேண்டிக் கொள்வதுதான் சரி. அதுவே அழுக்கைக் கழுவிவிடும்.

**- ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய சுவாமிகள்**

பாத்திரம் அறிந்து பிச்சையிடு - கோத்திரம் அறிந்து பெண்ணைக் கொடுன்னு வசனம் சொல்வா! எதுக்கும் ஜாக்கிரதையா நடந்துக்கோ' பிரசாதத்தைக் கொடுத்துவிட்டு பூஜைக்கு உள்ளே போய் விட்டார்.

என்ன இப்படிச் சொல்லிப்பிட்டா ரேன்னு மனசு கனத்தது. 'குடும்பம், பையனோட யோக்யதை பற்றி இன்னும் கொஞ்சம் விசாரிச்சிருக்கணுமோ? நிச்சயம் பண்ணி பத்திரிகையும் அடிச்சாச்சு. இனிமே ஒண்ணும் பண்றதுக் கில்லே. ஈஸ்வர சங்கல்பம் எப்படியோ அதன்படியே நடக்கட்டும். பகவான் கைவிடமாட்டார்' புத்தி வேதாந்தம் பேசியது. கல்யாணத்தை, சக்திக்கு மீறி சிறப்பா நடத்தி முடிச்சாச்சு.

மறு வருஷமே அடுத்த ரெண்டு பெண் களுக்கும் நல்ல வரன்களா அமைஞ்சுது. பத்திரிகையுடன் காஞ்சீபுரம் போனேன்.

பெரியவா எல்லாருக்கும் தரிசனம் கொடுக்கற சமயம் இது. வரிசையில நின்னா இன்னும் கொஞ்சநேரம் தரிசிக்க முடியுமேன்னு, நானும் வரிசையிலேயே போனேன். கிட்ட போனவுடனே, பழங் களோடு கல்யாணப் பத்திரிகையையும் தட்டுல வச்சு நீட்டினேன்.

பெரியவா என்னைப் பார்த்தா. அந்தப் பார்வையில இருந்தது அன்பா, கவலையா, கனிவா, ஆறுதலா... என்னன்னு புரிஞ்சுக்க முடியலை. அவ்வளவு ஆழமான கூர்மை யான பார்வை.

பத்திரிகையைப் பார்த்துட்டு, 'கொஞ் சம் அவசரப்படறியோன்னு தோன்றது. கல்யாணம் விமரிசையா நடக்கும். அதுக்கு அப்புறம் கொஞ்சம் ஜாக்கிரதையா இருந்துக்கோ.'

திடுக்கிட்டுப் போனது மனம்.''

*(தொடரும்)*



எல்லாப் பரண்களிலும்
இருக்கின்றது
இரகசியப் பாதையொன்று
ஞாபகங்களின் வழியே
நேற்றைக்குப் போவதற்கு

- பெ.பாண்டியன்

● உதவாக்கரையில்லை
காற்று
ஊரைச் சுற்றி வந்தாலும்

# வாசகர் கவிதைகள்

● ஓயாமல் ஒலிக்கும்
குயிலின் குரல்
ஓய்ந்து போயிருக்கலாம்
தெருப்பாடகனின்
மௌனத்தில்

- வீ.சிவசங்கர்



அம்மைத் திங்கள்
அந்திவானச் சிறகுகள்
ஆகாயத்தில் இமைக்காத
சூரியக் கண்

இரவு கொத்தும்
நட்சத்திரக் குருவிகள்
கரை துரத்தும் அலைகள்
புல்லில் தவமிருக்கும் பனித்துளி

அழகாயிருந்தது...
வாகனத்தில்
அடிபடத் தெரிந்த
கால் ஒடிந்த பூனைக் குட்டியை
ஓரமாய் எடுத்துவிட்ட
அழுக்குச் சட்டை
பிச்சைக்காரனின்
வெள்ளை மனசு!

- சிவபாரதி சிதம்பரம்





இரை தேடப் போனபிறகு
மிகத் தனிமையாய்
பறவைகளின் பாடலை
மீட்டிக் கொண்டிருக்கும்
எல்லா மரங்களும்

பெ.பாண்டியன்

மனித சந்தடி மறந்த லயிப்பில்
கொஞ்சமாய் ஆறுதல்
இன்னும் இருக்கிறது
தொட்டாச் சிணுங்கி இலைகளில்
மீண்டும் உயிர்ப்பிப்பு.

- வி.எம்.ஜெயந்தன்




"நீங்கதான் அடுத்த வைகைப் புயலா?" என்று பரணியிடம் கேட்டால், "ஸார், என்னோட நோக்கம் காமெடி இல்லை. எல்லா கேரக்டரும் செய்யணும். அதுக்குதான் நிறைய முயற்சி பண்ணிக்கிட்டிருக்கேன். வில்லனா நடிச்சா, பிரகாஷ்ராஜ். காமெடியா வந்தா வடிவேலு மாதிரி கலக்கணும்" என்கிறார் நாடோடிகள் படத்தில் தனித்த கவனத்தைப் பெற்ற பரணி.

"மதுரையிலிருந்து கோடம்பாக்கம் வந்ததே டைரக்டர் ஆகணும்னுதான். அஸிஸ்டெண்ட் டைரக்டராகறதுக்காக பாலாஜி சக்திவேல் ஸாரைப் பார்த்தேன். நாங்க 'கல்லூரி' படத்துக்காக நடிகர்களைத் தான் செலக்ட் பண்றோம். நீங்க நடிக்க முயற்சி பண்ணுங்கன்னார். இல்லை ஸார், நான் அஸிஸ்டெண்ட் டைரக்டராகத்தான் வந்தேன்னு சொல்லிட்டுக் கிளம்பிப் போன என்னை மறுபடியும் கூப்பிட்டு வாய்ப்பு கொடுத்தார். மூவாயிரம் பேர் வரை முயற்சி பண்ணின அந்த கேரக்டர் எனக்குக் கிடைச்சது. ஸினிமாவுல சான்ஸ் கிடைச்சதால காலேஜ்ல சேர்ந்து ரெகுலரா படிக்க முடியலை. ஆனால், பாலாஜி சக்திவேல் சாரின் 'கல்லூரி'யில் வாய்ப்புக் கிடைச்சதால இன்னைக்கு எல்லோரும் பார்க்கும்படியா உயர முடிஞ்சது" என்கிறார்.

# "அப்பா

## "என் தம்பி தங்கைங்க நல்லாப் படிப்பாங்க. அதனால அவங்களைத்தான் அப்பாவுக்குப் பிடிக்கும்!"

'' 'நாடோடிகள்', 'கல்லூரி'... படத்துல வர்ற அப்பாக்கள் கேரக்டர் மாதிரிதான் என் அப்பாவும். நான் ஐந்தாவது படிக்கும் போது தமிழ் நோட் புக்ல கதை, திரைக் கதை, வசனம், இயக்கம் பரணின்னு எழுதி வெச்சுருந்தேன். என் அப்பா எப்படியோ அதைப் பார்த்துட்டு அடிபின்னி எடுத்துட்டார்.

அன்னையிலிருந்து இன்னைக்கு வரைக்கும் என்கிட்ட சரியாகவே பேச மாட்டார். இவன் உருப்படவே மாட்டான்னு அப்பவே முடிவு பண்ணிட்டார் போல. என் தம்பியும், தங்கையும் நல்லா படிப்பாங்க. என் அப்பாவுக்கு அவங்களைத்தான் ரொம்பப் பிடிக்கும். எனக்கு ஆறுதலாகவும், உந்துதலாகவும் இருந்தது என் அம்மாவும், நண்பர்களும்தான். இன்னைக்கு 'நாடோடிகள்' தந்த வெற்றிக்கு அப்புறம் எங்க அப்பா என்னைப் பற்றி பெருமையாப் பேசி சந்தோஷப்படறதா கேள்விப்பட்டேன். இதுகூட என் பெரியப்பா சொல்லித்தான் நான் தெரிஞ்சுக்கிட்டேன்'' என்றவரின் கண்கள் நீர் கட்டு கின்றன.

''ஷூட்டிங் இல்லாத நாட்களில் மதுரையிலதான் இருப்பேன். எங்க வீட்டுப் பக்கத்துல இருக்கற மாரியம்மன் தெப்பக் குளம்தான் எனக்கும் ஃப்ரெண்ட்ஸுக்கும் மீட்டிங் பாயிண்ட். அங்கே உட்கார்ந்து ஜாலியா அரட்டை அடிச்ச விஷயங்களைத் தான் சினிமாவிலும் செஞ்சிருக்கேன். மதுரை தெப்பக்குளம்தான் எனக்கு க்ரியேட்டிவிட்டியைத் தர்ற இடம்.

படிச்சது மதுரை சௌராஷ்டிரா ஸ்கூல். நான் வாலிபால் ப்ளேயரா இருந்தேன். க்ளாஸ் ஹவர்ஸ்ல வாலிபால் கோச்சிங் போறேன்னு வாத்தியார்கிட்ட பர்மிஷன் வாங்கிட்டு மைதானத்துக்குப் போய்டுவேன். கொஞ்ச நேரத்துக்கு அப்புறம் பேக் ஸைட் கேட் வழியா வெளியே போய்டுவேன். எங்க ஸ்கூலுக்கு வெளியே நாலு திசையிலும் சினிப்பிரியா, அபிராமி, அம்பிகான்னு சினிமா தியேட்டர்கள். ஏதாவது ஒரு தியேட்டருக்குள் புகுந்துடுவேன். வீட்டுக்கு வந்து எங்கம்மாகிட்ட மட்டும் நான் கட் அடிச்சுட்டு சினிமாவுக்குப் போனதைச் சொல்லிடுவேன். நான் ஸ்கூல்ல இருந்த நாளைவிட சினிமா தியேட்டர்ல இருந்த நாள்தான் அதிகம். நான் ரசிகனா சினிமா பார்த்த மதுரை தியேட்டர்களில் இன்னைக்கு மத்த ரசிகர்களோட, நான் நடிச்ச படத்தைப் பார்க்கறது சந்தோஷமா இருக்கு. சமுத்திரகனி ஸார் நாடோடிகள் மூலமா நல்ல இடத்துக்கு என்னைக் கொண்டு போயிருக்கார். மறுபடியும் ஒரே மாதிரி கேரக்டர் பண்றதில் உடன்பாடில்லை. பரணி ஒரு கேரக்டர் பண்ணா அது தரணி முழுக்க பேசப்படணும்'' என்கிறார் பரணி.

ஜமாய்ங்க தரணி... ஸாரி... பரணி!

**- ராகவ்குமார்**

# பேசமாட்டேங்கறார்!"

## ராஜேஷ்குமார்



# நிருபமா...இது நியாயமா?

ஃபார்ச்சூன் ஃபார்மசூட்டிகல்ஸ் பிரைவேட் லிமிடெட் கேம்பஸின் மையத்தில் இருந்த பிரதான ஆஃபீஸ் கட்டடத்துக்குள் பர்சனல் செக்ஷன். ஆறு மணி.

''என்ன நிருபமா... ஆஃபீஸை விட்டுக் கிளம்பற மாதிரி உனக்கு ஐடியா இல்லையா..?'' வேலையை முடித்துக் கொண்ட பக்கத்து மேஜை யாமினி கேட்டுக் கொண்டே தன் கைப்பையை எடுத்துக் கொண்டாள்.

''இதோ முடிஞ்சுது யாமினி. ஒரு பதினைஞ்சு நிமிஷத்துல கௌம்பிடுவேன்.''

நிருபமா மறுபடியும் கம்ப்யூட்டரில் கவனமானாள்.

6-10க்கெல்லாம் ஹால் காலி. ப்ரொடக்ஷன் மானேஜர் நல்லபெருமான் கையில் வைத்திருந்த ஃபைலோடு அவளை நெருங்கினார்.

''நிருபமா, புறப்பட்டுட்டியா?''

''ஏன் ஸார்?''

''இந்த ப்ராக்ரஸ் ஃபைலில் இருக்கிற ஸ்டேட்மெண்ட்டுகளை தேதிவாரியா பிரிச்சு கொஞ்சம் ஒழுங்குபடுத்திக் கொடும்மா. நாளைக்குக் காலையில் நடக்கிற போர்டு மீட்டிங்ல இந்த ஃபைலை வெச்சுக்கிட்டுத்தான் எம்.டி. பேசணும்.''

நிருபமா தலையாட்டினாள்.

''ஓ.கே. ஸார்! நான் ஃபைலைப் பார்த்து ஒழுங்குபடுத்திடறேன்.''

''ரொம்ப தேங்க்ஸ்மா...'' நல்லபெருமாள் சொல்லி

விட்டு ஒரு நிம்மதிப் பெரு மூச்சோடு நகர்ந்துவிட, நிருபமா தன் கையிலிருந்த ஃபைலைப் பிரித்தாள்.

ப்ரொடக்ஷன் மானேஜர் நல்லபெருமாள் ஆஃபீஸ் போர்டிகோவில் இருந்த தன் காரைக் கிளப்பி க்ரம் பௌண்ட் கேட்டைத் தாண்டியதும், காரின் வேகத்தைக் குறைத்து அந்தச் சாயுந்தர இருட்டில் அரைவட்டம் அடித்துக் கொண்டு அட்மினிஸ்ட்ரேஷன் கட்டடத்துக்குப் பின்பக்கமாய்ப் போய் நிறுத்திக் கொண்டு கீழே இறங்கினார்.

சுற்றும் முற்றும் ஒரு தடவை பார்த்துக் கொண்டு, குறுகலான கம்பி கேட் வழியே நுழைந்து வராந்தாவின் மையத்தில் இருந்த கான்ஃபரன்ஸ் ஹாலின் கதவைத் தள்ளி உள்ளே போனார். எலிப்ஸ் வடிவில் போடப்பட்டிருந்த மேஜையைச் சுற்றிலும் நாற்காலிகள் தெரிய, ஒன்றில் உட்கார்ந்து இருந்த ரிசர்ச் அவலைசர் பிரபுராம் அவரைப் பார்த்ததும் எழுந்தார்.

''ஸார்..!''

''உட்கார்ங்க பிரபுராம்.

''என்ன விஷயமா என்னை இங்கே வெயிட் பண்ணச் சொன்னீங்க ஸார்?''

''நம்ம கம்பெனியின் ரிசர்ச் டிபார்ட்மெண்ட் ஃபார்முலாக்கள் மத்த கம்பெனிகளுக்கு எப்படியோ போய்ச் சேருதே... அது எப்படின்னு இன்னைக்கு நாம கண்டுபிடிக்கப் போறோம்.''

''எப்படி ஸார்?''

''கடந்த ரெண்டு வார காலமாய் ரிசர்ச் அண்ட் டெவலப்மெண்ட் டிபார்ட்மெண்டில் இருக்கிற எல்லா ஸ்டாஃப்பையும் வாட்ச் பண்ணிப் பார்த்தாச்சு. யாருமே சிக்கலை. பட் நம்ம எம்.டி.க்கு மட்டும் ப்ரோக்ராமிங் செக்ஷனில் வேலை பார்க்கிற நிருபமா மேல கொஞ்சம் டவுட்.

அதான் அவளுக்கு இப்போ ஒரு வொர்க் கொடுத்திருக்கேன். அவளுக்கும் திருட்டுப் போன ஃபார்முலாக்களுக்கும் உண்மையிலேயே சம்பந்தம் இருந்தா, அவ நிச்சயமா இந்த இரண்டு மணி நேரத் தனிமையை உபயோகப்படுத்திக்கப் பார்ப்பாள். அந்த நேரத்துல அவளைக் கையும் களவுமாய்ப் பிடிச்சுடலாம்.''

ஒரு மணி நேரத்துக்குள் பாதி ஃபைலைப் பார்த்து முடித்துவிட்ட



நிருபமா தன்னுடைய வானிடி பேக்கிலிருந்து செல்ஃபோனை எடுத்துப் பேசினாள்.

''சிவா...! நான் நிரு...''

''நானே உனக்கு ஃபோன் பண்ணலாம்ன்னு இருந்தேன். நீயே பண்ணிட்டே. என்ன விஷயம் சொல்லு...?'' மறுமுனையில் ஒரு ஆண் குரல்.

''போன வாரம் ஒரு புது மெடிசனுக்கான ஃபார்முலாவை எங்க கம்பெனி கண்டுபிடிச்சிருக்கு. அதை இன்னைக்கு எடுத்துடலாம்ன்னு இருக்கேன்.''

''எடுத்துடு... எடுத்துடு...! நான் நேர்ல வந்து வாங்கிக்கட்டுமா?''

''வேண்டாம் சிவா. நாம வழக்கமாய் சந்திக்கிற ரெஸ்ட்டாரெண்ட்டுக்கு வந்துடு. அப்படியே உன்னோட கம்பெனி எம்.டி. கிட்டே விஷயத்தைச் சொல்லி ஒரு பெரிய தொகையையும் கொண்டாந்துடு.''

நல்லபெருமாளும், பிரபுராமும் வாட்ச்சைப் பார்த்தார்கள். நேரம் 7:35

''என்ன ஸார்...! நிருபமா... இன்னும் இருக்கிற இடத்தை விட்டு அசையாமே வேலை பார்த்துட்டிருக்கா? ஒருவேளை உங்க கெஸ் வொர்க் தப்போ...?'' - மறுத்துத் தலையசைத்தார் நல்லபெருமாள்.

''நோ... நோ... பிரபுராம்! கண்டிப்பா அந்த நிருபமாகிட்டே தப்பு இருக்கு. கொஞ்ச நேரத்துக்கு முன்னாடி யார் கூடவோ செல்ஃபோனில் பேசியிருக்கா. பார்க்கலாம். இனிமே என்ன பண்றான்னு?''

''எந்திரிச்சு நின்னு சுற்றும் முற்றும் திருட்டுப் பார்வை பார்க்கிறா. வானிடிபேக்கிலிருந்து எதையோ எடுக்கிறா!''

''அது மேக்னடிக் மாஸ்டர் கீ பன்ச்.''

நிருபமா தன் இரண்டு கண்களிலும் நிறைய எச்சரிக்கையை நிரப்பிக் கொண்டு ரிசர்ச் அண்ட் டெவலப்மெண்ட் அறையை நெருங்கினாள். மேக்னடிக் மாஸ்டர் கீ பன்ச்சை உபயோகப்படுத்திச் சுலபமாய்க் கதவைத் திறந்தாள்.

தன் ஜாக்கெட்டின் மறைவிலிருந்த பென்டார்ச்சை உருவிக்கொண்டு அறையின் வலது பக்கம் இருந்த பீரோவை நோக்கிப்போனாள். மாஸ்டர் கீ பன்ச்சை உபயோகப்படுத்தி பீரோவைத் திறக்க முயன்ற விநாடி- ஏதோ சத்தம்!

ஆர் அண்ட் டி அறைக் கதவை யாரோ திறக்கிற மாதிரி இருந்தது. நிருபமா திக்கித்துப் போய்த் திரும்பினாள். சுற்றும் முற்றும் பார்த்து சுவரோரமாய் இருந்த அந்தக் கனமான இரும்பு ஸ்டூலை இரண்டு கைகளாலும் எடுத்துக் கொண்டு கதவு ஓரமாய்ப் பாய்ந்து

**சாதுர்யா தொடர் - 6**

***சாதுர்யா பேசறேன்... டாக்டர் சதுர்வேதியோட ஹாஸ்பிடலில், கடந்த சில மாதங்களாகவே ஹார்ட் அட்டாக்குக்காக அட்மிட் செய்யப்பட்டு குணமாகும் நிலையில் இருந்த பெரிய புள்ளிகள் இறந்து போனார்கள். ஒரு புலனாய்வுப் பத்திரிகை நிருபர் இந்தத் தகவலை என் கவனத்துக்குக் கொண்டு வந்தார். அது உண்மையான்னு கண்டுபிடிக்க, ஒரு சீக்கியக் குடும்பத்திடம் பேசி அவங்க வீட்டுப் பெரியவரை நோயாளி போல் நடிக்க வைக்கச் சம்மதம் வாங்கினோம். தொடர்ந்து சதுர்வேதியோட நடவடிக்கையைக் கண்காணித்தபோது வசமாக மாட்டிக்கிட்டார். சரியான பதிலை யூகித்து எழுதிய வாசகர்களில் குலுக்கலில் தேர்வானவர்களின் விவரம் 'வட்டமேஜை' பக்கத்தில்...***

போய் நின்றாள். தலைக்கு மேல் உயர்த்திப் பிடித்துக் கொண்டாள்.

'யார் உள்ளே வந்தாலும் சரி; ஒரே போடாய்ப் போட்டுட வேண்டியதுதான்!'

காத்திருந்தாள் நிருபமா.

**கா**லை ஆறரை மணி.

ஃபார்ச்சூன் ஃபார்மசூடி



கல்ஸ் கட்டடத்தின் பின்பக்கமாய் வந்து நின்றது அந்த ஆக்டிவா ஸ்கூட்டர். ஸ்கூட்டரை நிறுத்திவிட்டு சற்றுத் தொலைவில் நின்றிருந்த போலீஸ் ஜீப்பை நோக்கிப் போனாள் சாதுர்யா.

இன்ஸ்பெக்டர் கிருஷ்ணகுமார் சாதுர்யாவைப் பார்த்ததும், ''ஹலோ!'' என்று சொல்லிக் கையை உயர்த்தினார்.

''அதுக்குள்ளே உங்களுக்கு நியூஸ் வந்தாச்சா?''

''மர்டர் ஸ்பாட் எது?''

''வாங்க இந்தப் பக்கம்!'' இன்ஸ்பெக்டர் சொல்லிவிட்டு, ஒரு பெரிய மரத்துக்குப் பின்னால் இருந்த பள்ளத்தை நோக்கிப் போனார்.

''மரணம் எப்படி?''

''தலையில் ஓங்கி அடிச்சிருக்காங்க. மண்டை உடைஞ்சு கபால மோட்சம்.''

சாதுர்யா பள்ளத்தை எட்டிப் பார்த்தாள். பள்ளத்தின் மையத்தில் உயிரை விட்ட நிலையில் நிருபமா மல்லாந்து கிடந்தாள். சாதுர்யா இறங்கி பாடியைப் பார்த்துவிட்டு மேலே வந்தாள்.

''கொலை செய்யப்பட்ட பெண் யார்ங்கிற விவரம் தெரிஞ்சுதா ஸார்..?''

''ம்... தெரிஞ்சுது..! பெண்ணோட பெயர் நிருபமா. பக்கத்துல இருக்கிற ஃபார்ச்சூன் ஃபார்மசூடிகல்ஸ் கம்பெனியில் கம்ப்யூட்டர் செக்‌ஷனில் ப்ரோக்ராமர் வேலை. இந்தக் கொலையில் ஒரு குழப்பம் இருக்கு.''

''என்ன குழப்பம்?''

கான்ஸ்டபிளைத் திரும்பிப் பார்த்தார் இன்ஸ்பெக்டர்.

''யோவ்...! அதோ... அந்தக் கார்ல உட்கார்ந்துட்டு இருக்கிற ப்ரொடக்‌ஷன் மானேஜர் நல்லபெருமாளைக் கூட்டிக்கிட்டு வாய்யா.''

கான்ஸ்டபிள் ஓடிப் போய்க் கூட்டி வந்தார்.

வியர்த்து விறுவிறுத்துப் போயிருந்த நல்லபெருமாள் நடுக்கத்தோடு சாதுர்யாவை ஏறிட்டார்.

''மேடம்! எங்க கம்பெனியில் சமீபகாலமாய் ஆர் அண்ட் டி செக்‌ஷனிலிருந்து மெடிக்கல் ப்ராடக்ட்ஸ் சம்பந்தமான சீக்ரெட் ஃபார்முலாக்கள் யார் மூலமாகவோ திருடப்பட்டு வந்தது. அது யார்ன்னு கண்டுபிடிக்கிற முயற்சியில் கம்பெனி எம்.டி.யோட இன்ஸ்ட்ரக்‌ஷன்படி கடந்த ஒரு வாரமாய் முயற்சி பண்ணிட்டு வந்தேன். நேற்றைக்கு என்னோட சந்தேக

லிஸ்ட்டில் இருந்த நிருபமாவுக்கு வேணும்ன்னே பர்ப்பஸா ஒரு வேலை கொடுத்து அவளை வாட்ச் பண்ண முடிவு செய்தேன்'' என்ற நல்ல பெருமாள் விஷயத்தைத் தொடர்ந்தார்.

''ஏழரை மணி சுமாருக்கு அவ எழுந்து ஆர் அண்ட் டி.



செக்ஷனுக்குப் போனா. நாங்களும் அவளை ஃபாலோ பண்ண நினைச்சபோது எம்.டி. கிட்டயிருந்து எனக்கு ஒரு அவசர ஃபோன் வந்தது. அந்த ஃபோனை அட்டெண்ட் பண்ணிட்டு நானும் பிரபுராமும் ஆர் அண்ட் டி செக்ஷனுக்குப் போனோம். அங்கே நிருபமா இல்லை. எல்லா இடத்திலும் தேடிப் பார்த்துட்டுக் கம்பெனியின் முன்பக்கம் இருக்கிற செக்யூரிட்டி ஆபீஸர் மேத்யூ கிட்டே வந்து விசாரிச்சோம்.''

''அவர் என்ன சொன்னார்?''

''ஏழே முக்கால் மணி சுமாருக்கு நிருபமா ஆஃபீஸிலிருந்து வேகவேகமாய் வெளியே வந்து, காம்பவுண்ட் கேட்டுக்குக் கொஞ்சம் தள்ளி நின்னுக்கிட்டு இருந்த ஒரு காரில் ஏறிப் போனதாய்ச் சொன்னார்.''

''மேத்யூ இங்கே இருக்காரா?''

''அயாம் ஹியர் மேடம்...'' சற்றுத் தள்ளி நின்றிருந்த செக்யூரிட்டி ஆபீஸர் மேத்யூ ஓடிவந்தார்.

''மிஸ்டர் மேத்யூ! நிருபமா ஏறிப் போன கார் மாருதியா? அம்பாஸிடரா? இல்லை வேற ஏதாவது காரா?''

''லான்ஸர்ன்னு நினைக்கிறேன் மேடம். நெம்பரைப் பார்க்க முடியலை.''

''ஏதாவது பேசினாரா?''

'' 'ஓவர் டைம்' ட்யூட்டி முடிஞ்சது. நான் கிளம்பறேன். ஆஃபீஸை நீங்க லாக் பண்ணிக்கலாம்ன்னு

**"போனவாரம் ஒரு புது மெடிஸனுக்கான ஃபார்முலாவை எங்க கம்பெனி கண்டுபிடிச்சிருக்கு. அதை இன்னைக்குத் தரலாம்னு இருக்கேன்!"**

சொன்னாங்க. அந்த நேரத்துல அவங்க இயல்பாய் இல்லை. தலைமுடியெல்லாம் கலைஞ்சு டென்ஷனாய் இருந்தாங்க...''

''ப்ரொடக்ஷன் மானேஜர் நல்லபெருமாளும் ரிசர்ச் அனலைஸர் பிரபுராமும் ஆஃபீஸுக்குள்ளே ரகசியமாய் மறைந்திருந்தது உங்களுக்குத் தெரியுமா...?''

''தெரியாது மேடம்..!''

விசாரணையை முடித்துவிட்டு ஜீப்புக்கு வந்தார்கள். இன்ஸ்பெக்டர் தீர்மானமான குரலில் சொன்னார்.

''மிஸ் சாதுர்யா...! நிருபமா ஆஃபீஸில் உள்ள ஆர் அண்ட் டி செக்ஷனுக்கு மேக்னடிக் மாஸ்டர் கீ பஞ்சோடு போனதை நல்லபெருமாளும், பிரபுராமும் பார்த்திருக்காங்க. நல்லபெருமாள் எம்.டி.யோடு செல்ஃபோனில் பேசிக்கிட்டு இருக்கும்போது அதை எப்படியோ ஸ்மெல் பண்ணிக்கிட்ட நிருபமா அந்த 'ஆர் அண்ட் டி' அறையை விட்டு வேகவேகமாய் வெளியேறி, தனக்காக வெளியே காத்திருந்த காரில் ஏறிப் போயிருக்கணும். அதுக்குப் பிறகு காரில் வந்த நபருக்கும் நிருபமாவுக்கும் ஏதாவது பிரச்னை ஏற்பட்டு

அது மர்டரில் போய் முடிந் திருக்கலாம். இது என்னோட அஸ்ஸெம்ஷன். நீங்க என்ன நினைக்கறீங்க சாதுர்யா?''

சாதுர்யா தலையசைத்தாள்.

''யூ... மே...பி... கரெக்ட் ஸார். பட் இந்த மர்டரை நான் வேற ஒரு கோணத்துல 'கெஸ் வொர்க்' பண்ணிப் பார்க்க விரும்பறேன்!'' என்று புன்னகைத்தாள்.

இரண்டு நாட்கள் கழித்து- காலை பதினொரு மணி. ஃபார்ச்சூன் ஃபார்மாசூடிகல்ஸ் கம்பெனி எம்.டி. சங்கர் ராமுக்கு முன்பாய் சாதுர்யா உட்கார்ந்திருந்தாள். கையில் ஒரு ப்ரோப் ஃபைல்.

''ஸார்! நிருபமா கொலை செய்யப்பட்ட விவகாரத்தில் என்னுடைய விசாரணை முடிந்தது. கடந்த இரண்டு நாட்களாய்ச் சேகரித்த தகவல்களின் அடிப்படையில் கொலையாளி யாராக இருக்கக்கூடும் என்பதை முடிவு பண்ணிட்டேன்.''

சங்கர்ராம் கலக்கத்தோடு நிமிர்ந்து உட்கார்ந்தார்.

''யார்... அந்தக் கொலையாளி?''

''உங்கள் கம்பெனியின் செக்யூரிடி ஆஃபீஸர் மேத்யூதான். இன்னைக்கு விடியற்காலையிலேயே அவர் வீட்டுக்குப் போய் அவரை அரஸ்ட் பண்ணி லாக்கப்புக்குக் கொண்டு போய் விசாரிக்கிற விதத்துல விசாரிச்சதும் உண்மையை ஒத்துக்கிட்டார். இதோ அவர் கொடுத்த வாக்குமூலம்.''

சொன்ன சாதுர்யா தான் கையோடு கொண்டு போயிருந்த அந்த மினி டேப்ரிக்கார்டரை இயக்க மேத்யூவின் குரல் கேட்டது.

''அழகாய் இருக்கிற நிருபமா மேல் ரொம்ப நாளாவே எனக்கு ஒரு கண். சமயத்தை எதிர்பார்த்துட்டிருந்தேன். நிருபமா அன்று தனியா ஆபீஸ்ல இருந்தா. நல்லபெருமாளும், பிரபுராமும் கம்பெனிக்குள்ளே இருக்கிற விஷயம் எனக்குத் தெரியாது. ஏழரை மணி சுமாருக்கு நிருபமா எழுந்து ஆர் அண்ட் டி செக்ஷனுக்குப் போனா. என்னோட மனசுக்கு அவ ஏதோ தப்புக் காரியம் பண்றான்னு தோணிச்சு. அதை வெச்சே அவளை மிரட்டி என்னோட ஆசைக்குப் பணிய வைக்கணும்ன்னு முடிவோடு நானும் போனேன். நான் வர்றதைத் தெரிஞ்சுக்கிட்ட நிருபமா இரும்பு ஸ்டூலால் என்னைத் தாக்க முயற்சி பண்ணினா. நான் சுதாரிச்சுக்கிட்டு அவளைத் தாக்கினேன். அவளும் என்னோடு மூர்க்கமா சண்டை போட்டா. நான் கோபத்தைக் கட்டுப்படுத்திக்க முடியாம ஸ்டூலை எடுத்து அவளோட தலையில் அடிச்சேன். செத்துட்டா.''

டேப்ரிக்கார்டரை நிறுத்தினாள் சாதுர்யா.

''மேத்யூதான் குற்றவாளின்னு நீங்க எப்படிக் கண்டுபிடிச்சீங்க...?''

சாதுர்யா சொல்ல ஆரம்பித்தாள். ●



**துப்பறியும் போட்டி-7**

வாசகர்களே...

சாதுர்யா குற்றவாளியை எப்படிக் கண்டுபிடித்தாள்?

இந்தத் தடவை உங்களுக்கு சுலபமான 'க்ளூ' கிடையாது. கடினமான க்ளூ. அதுவும் ஒரே ஒரு க்ளூதான்.

க்ளூ: 'O' Bombay

உங்கள் கற்பனையைத் தட்டி விட்டு சரியான பதிலை போஸ்ட் கார்டில் எழுதி அனுப்புங்கள். துப்பறியும் போட்டி-7 என்று குறிப்பிட்டு கல்கி முகவரிக்கு அனுப்புங்கள். ஆசிரியர் தீர்ப்பே இறுதி.

கடைசித் தேதி: 19.08.09

# நீங்க ச்சும்மா கோடு போடுங்க...
# நாங்க உடனே ரோடு போடறோம்!

ஆமாம்! உங்க திருவண்ணாமலை, வேலூர் மாவட்டங்களுக்கு 'கல்கி' குழு, நேரில் வந்து உங்கள் பிரச்னை / யோசனையை ஆராய்ந்து, உங்கள் வாய்ஸுக்கு 'கல்கி' இதழ் மூலம் மைக் கொடுக்கும்!

ஆனா சில கண்டிஷன்ஸ்...

- கீழே உள்ள கூப்பனைக் கத்தரித்து ஒட்டி அனுப்பப்படும் கடிதம், படைப்பு மட்டுமே, பரிசீலனைக்கு எடுத்துக்கொள்ளப்படும்...
- ஒரு கடிதத்தில் 5 செய்திகள் / படைப்புகள் மட்டுமே இருக்கலாம்.
- ஒருவரே எத்தனை கடிதம், படைப்புகள் வேண்டுமானாலும் அனுப்பலாம் (தனித்தனி கூப்பனுடன்).
- பிரசுரமாகும் கடிதங்கள், யோசனைகள், படைப்புகளுக்குச் சன்மானங்கள் உண்டு.
- வாசகர்கள் தேர்வு செய்யும் மிகச் சிறந்த கடிதம் அல்லது யோசனை அல்லது படைப்புகளுக்குச் சிறப்புப் பரிசும் உண்டு...
- திருவண்ணாமலை, வேலூர் வட்டாரத்தின்...

பிரச்னைகளுக்கு - ☑ பெட்டிஷன் பாக்ஸ்

ஆன்மிக, வியாபார, சுற்றுலா தலங்களின் சிறப்புக்கு - ☑ நியூஸ் ஏந்தி பவன்

சிறுகதைகள், கவிதைகளுக்கு - ☑ வேடந்தாங்கல்

நகைச்சுவைக்கு - ☑ ஜோக் ஃபால்ஸ்

என்றவாறு கூப்பனில் ☑ செய்து கவரின் மேல் ஒட்டி, உங்களின் முழு முகவரி, தொலைபேசி தொடர்பு எண் ஆகியவற்றைக் கட்டாயம் எழுதி அனுப்பவும்.

**கடிதங்கள் வந்து சேரவேண்டிய கடைசி தேதி : 20.8.09**

**கலக்க வருதுப்பா கல்கி**
**திருவண்ணாமலை, வேலூர்**

☐ நியூஸ் ஏந்தி பவன் ☐ பெட்டிஷன் பாக்ஸ்

☐ வேடந்தாங்கல் ☐ ஜோக் ஃபால்ஸ்



47, ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல், சென்னை - 32



"எங்க மழையினால மாமூல் வாழ்க்கை பாதிக்கப்பட்டதுன்னு டி.வி.யில சொன்னாங்க. உங்க 'மாமூல்' ஒண்ணும் பாதிக்கலையே?"

"...........!"

-வரத.சண்முக சுந்தரவடிவேலு



"உன் கணவர்கிட்ட பிடிச்சது என்ன?"

"எவ்வளவு சண்டை போட்டாலும் கோபத்தை, சமையல்ல காட்ட மாட்டார்."

- அம்பை தேவா

## எதிர் கோஷ்டிக்குக் கல்யாணப் பத்திரிகை!

"ரெண்டு வாரமா ஊர்ல இல்லாம இந்த சீரியலைப் பார்க்க முடியலே, கடைசியா பார்த்தது 'அனுபமா' மணமேடைல வந்து உட்கார்ந்ததைத் தான்...!"

"கவலைப்படாதே. இன்னும் புரோகிதர் மந்திரம்தான் சொல்லிக்கிட்டு இருக்கார்; தாலி கட்டலே!"

- வெ.சீதாராமன்

''இனி, 'கிளினிக்' பக்கமே வராதீங்க!''

''ஏன், டாக்டர்?''

''உங்க உடல் ஆரோக்கியத்தை செக்-அப் பண்ணி, 'நார்மல்'ங்கிறதைப் பார்க்கும்போதெல்லாம், எனக்கு 'பி.பி.' ஏறுது!''

- வாசகன்





''கல்யாணப் பத்திரிகைல தலைவர் தேதி, நேரம், இடம் போடலியே... ஏன்?''

''இது எதிர் கோஷ்டிக்குக் குடுக்கறது.''

- அம்பை தேவா

''என்னங்க! நம்ம மருமகளை என் ஒருத்தியால சமாளிக்கவே முடியலை...''

''அப்ப, நான் வேணும்னா இன்னொரு கல்யாணம் பண்ணிக் கட்டுமா?''

- உஷா சாரதிடேச்சு






# கிராமத்து வெளி






நாஞ்சில் சிவிலோக





பிளாஸ்டிக் குடத்துக்கு சிட்-அவுட்டாம்,
மண் பானைக்கு கெட் அவுட்டாம்!



பானையெல்லாம்
பரணுக்குப் போன
பின்னாடி
பைப்லதான் தண்ணி
குடிக்கறேன்

புகைப்படங்கள் :
நாஞ்சில் சினிலோக்
கமெண்ட்ஸ் : கார்த்திகா



லிஃப்ட் வேணுமா தாத்தா?

# மேற்கு வங்க பக்கம்

லோக் சபா தேர்தலில் படுதோல்வி, உள்ளாட்சித் தேர்தலில் தோல்வி என அடிமேல் அடி வாங்கிக் கொண்டிருக்கிறது ஆளும் மார்க்சிஸ்ட் கூட்டணி. 2011 சட்டசபைத் தேர்தலில் அடி வாங்காமல் ஆட்சியைத் தக்கவைத்துக் கொள்வது எப்படி என்று ஓவர் டைம் வேலை பார்த்துக் கொண்டிருக்கிறார் முதலமைச்சர் புத்ததேவ். தாறுமாறாக எகிறிவிட்ட விலைவாசியைக் கட்டுப்படுத்த வேண்டியதுதான் முதல் வேலை என்று அவருக்கு ஆக்ஷன் பிளான் போட்டுக் கொடுத்திருக்கிறது கட்சி மேலிடம். அதன்படி ரேஷன் கடைகளில் மார்க்கெட் ரேட்டைவிட மூன்று ரூபாய் குறைவாக உருளைக் கிழங்கு விற்க நடவடிக்கை எடுக்கப்பட்டுள்ளது.

**(இலவச கலர் டி.வி. கொடுப்பதாக அறிவியுங்கள் தோழரே! சுலபமா கெலிச்சிடுவீங்க!)**



# லேடீஸ்



பாராளுமன்ற உறுப்பினர்கள் இனிமேல் சுவையான பெங்காலி இனிப்பு வகைகளையும், நாவுக்கு ருசியான பெங்காலி உணவு ஐட்டங்களையும் சாப்பிட வழி செய்திருக்கிறார் மம்தா பானர்ஜி. மேற்கு வங்காளத்திலிருந்து ஸ்பெஷலாக ஒரு சமையல் நிபுணரை, பாராளுமன்ற வளாகத்திலுள்ள இந்தியன் ரயில்வே கேட்டரிங் சர்வீஸ் உணவகத்துக்கு வரவழைத்திருக்கிறார். சில மாதங்கள் டெல்லியில் தங்கி [illegible] சமையல்காரர்களுக்கு பெங்காலி சமையல் கற்றுக் கொடுத்துவிட்டு, ஊருக்குப் போய்விடுவாராம் அவர்.

**(தலப்பாக்கட்டு பிரியாணி கிடைக்குமா?)**

இன்னொரு மம்தா நியூஸ். அண்மையில் கொல்கத்தாவிலிருந்து பாந்தல் ஸ்டேஷன்

வரை 'லேடீஸ் ஸ்பெஷல்' ரயிலை, கொடி அசைத்துத் துவக்கி வைத்தார் மம்தா. இந்த ரயில், வாரத்துக்கு ஞாயிறு தவிர ஆறு நாட்கள் ஓடும். நிகழ்ச்சியில் பேசிய மம்தா, ''வங்காளத்தின் உழைக்கும் பெண்களுக்கு நான் தரும் பரிசு இது'' என்று குறிப்பிட்டார்.

***(எங்க ஊர்ல பெண்களுக்கு லட்டுக்குள்ள மூக்குத்திதான் பரிசா தருவாங்க!)***

**லா**லுவின் ராஷ்டிரிய ஜனதா தளக் கட்சிக்கு மேற்கு வங்க சட்டசபையில் ஒரே ஒரு எம்.எல்.ஏ. இருந்தார். அண்மையில் அவரும்,

# ஸ்பெஷல்

பிரணாப் முகர்ஜியைச் சந்தித்து மாலை போட்டுவிட்டு, காங்கிரஸ் கட்சிக்குத் தாவிவிட்டார். காரணம் கேட்டபோது லாலு மாதிரியே ஸ்டேட்மென்ட் விட்டார். ''காங்கிரஸ், கம்யூனிஸ்ட்களைவிட செக்யூலர் கட்சி!''

***(லாலுஜி! ஜாக்கிரதை! ராப்ரிதேவியும் கோவிச்சுக்கிட்டு காங்கிரஸுக்கு ஜம்ப்பாயிடப் போறாங்க!)***

**கு**ழந்தைகளை வேலைக்கு வைத்துக் கொள்வதைத் தடுக்க நடவடிக்கை ஒரு பக்கம் என்றால், இன்னொரு பக்கம் மேற்கு வங்க அரசு விவசாய வேலை செய்யும் குழந்தைத் தொழிலாளர்களுக்கு குறைந்த பட்சக் கூலி 61 ரூபாய் என நிர்ணயித்திருப்பது சர்ச்சையைக் கிளப்பி இருக்கிறது. இம்மாநிலத்தில் 8.6 லட்சம் குழந்தைத் தொழிலாளர்கள் இருப்பதாக புள்ளி விவரங்கள் சொல்கின்றன. ''விவசாயம், குழந்தைகளுக்கு உடல்நலப் பாதிப்பு ஏற்படுத்தும் ஆபத்தான தொழில் இல்லை'' என்பது அரசு சார்பு விளக்கம்.

***(இது என்னய்யா கம்யூனிஸம்? காரல்மார்க்ஸுக்கே கடுப்படிக்கும்!)***

**- பரத் ராம்**



**அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டியில் பிரசுரத்துக்குத் தேர்வான கதை-1**

# "அப்பத்தாவின் கொட்டடிச் சேலை"

"இந்த எழவெடுத்த பய பை மூட்டையைக் கொண்டாந்து விட்டெறிஞ்ச கையோட ஓடியாந்துர்றானே இந்த கம்மாய்க்குள்ள ஆட்டம் போடுறதுக்கு... ஏய்...ய்... பயலே" அப்பத்தாவை யாராவது கடந்து சென்றால் சொல்லியும் விடும்.

"ஏத்தா எம்புட்டு பயபுள்ள அங்கன விளையாடிட்டு நின்னான்னா ஒரு அதட்டு போட்டு விரட்டி விடுத்தா" அப்பத்தாவின் பேச்சைக் கேட்டு அனுப்பப்படுபவர்களும் என்னைத் திட்டித் துரத்துவார்கள்.

"ஆளையும் மொகரக்கட்டையும் பாரு... கருவாடு மாதிரி வத்தி வந்துட்டே. நாலு பேரு பாத்தா என்ன நினைப்பாங்க, ஆத்தா அப்பன் இல்லாத புள்ளைக்குக் கஞ்சித் தண்ணி ஊத்துறாளா கொல்றாளான்னு நினைக்காதுங்க கூறுகெட்டதுங்க."

திட்டிக் கொண்டிருக்கையிலேயே கொட்டடிச் சேலையைப் பிடித்தபடி வரும் என்னை, காது, மூக்கு என்று எங்கெல்லாம் மண் ஒட்டியிருக்கிறதோ, அதையெல்லாம் தட்டி விட்டபடியே நடை நீண்டுகொண்டிருக்கும். கண்மாய் மடை ஓரத்துக்கு வந்தவுடன், தேங்கிக் கிடக்கும் மடை புகா தண்ணீரில் குளிக்கச் சொல்லும்.

"போ...டா... போய் விழுக்காடு விழுந்தெந்திரிச்சவா... இந்தா... சவரக் கட்டி தேய்ச்சு கிச்சு குளி...போ..."

கழற்றிவிடப்பட்ட ட்ரவுசரை சவுக்காரக் கட்டியால் தேய்த்துக் கும்மி, வெயிலுக்கு முக்காடு போடுவதைப் போல தலையில் போட்டுக் கொள்ளும். கொட்டடிச் சேலையின் கடைசிச் சுற்றுக்குள் அப்பத்தாவை ஒட்டி நடை பிரண்டு நான் நகர்ந்து கொண்டிருக்கும்போதே. மாராப்பு பகுதியிலிருக்கும் ஓரத்துப் பகுதியெடுத்து தலையைத் துவட்டி விட்டபடி வரும். கொட்டடிச் சேலை என்பதால் தலையில் வைத்து ஒரு தட்டு தட்டும்போதே ஈரம் காணாமல் சேலையோடு புதைந்து போகும். பெரும்பாலும் அப்பத்தா சேலை என்னைத் துவட்டும்போதுதான் அழுக்காகியிருக்கிறது.

கிராமத்தின் நடுத்தெரு வழியாகத்தான் கண்மாய் முடிந்து வீடு போக வேண்டும். கிழத்தெரு ஓரம்தான் கண்மாய்; மேலத்தெருவில் வீடு. நடுத்தெருவில் ஒரு வீடே பிரதான டீக்கடை. அதன் அருகில் வந்ததும் அப்பத்தா ஒரு விசாரணை போடும்.

"ஏத்தா இந்தப் பய காலையில் ஏதாச்சும் பலகாரம் கிலகாரம் தின்னானா?"

"நாலு இட்லி கட்டி புட்டுப் போட்டான்."

"இன்னு ரெண்டு வைக்க வேண்டியதானே?"

''நாலுலேயும் பாதிய கோழிதான் கொத்திக்கிட்டு நின்னுச்க''

''வந்து பொறந்துருக்கு பாரு எம் வம்சத்திலே... அலக்க மலக்க திங்காம கொன்னாம.''

**கோ**ழி கூப்பிட்டு அப்பத்தா முழிக்கு மென்றால், இக்கடைக்காரக்கா அப்பத்தா குரல் கேட்டு எந்திரிச்சு அடுப்பு பத்தவைக் கும். முதல் போணியாக பாகு டீயை சத்தம்போட்டு உறிஞ்சிக் குடித்துவிட்டு, பழுத்த வாழையிலையில் எனக்கு மொத ஈடாக அவித்த இட்டிலியில் நான்கைந் தைக் கட்டி வந்துரும். அரைத் தூக்கத் திலேயே பாதியை ஊட்டி விட்டபடி மீந்ததை வழித்து வாயில் போட்டபடி களையெடுக்கப் போய்விடும்.

மதியவாக்கில் நடுத்தெரு வரும்போதே கொட்டடிச் சேலையின் முனைமுடிப்பை அவிழ்த்து அதில் இருந்து சிவப்பு இரண்டு ரூபாயை நீட்டி நாலணா, எட்டணா என மீதியை வாங்கி, ஏற்கெனவே முடிந்து வைத் திருக்கும் கருப்பு ஒரு ரூபாயு டனோ, பச்சை அஞ்சு ரூபாயு டனோ வைத்து இன்னும் இறுக்கமாக ஒரு முடிச்சைப்



போட்டு வைக்கும். கொட்டடிச் சேலை முனைதான் எப்போதும் அதன் இன்னொரு ரெங்குப் பெட்டி. அப்பத்தாவுக்கு ஒரு ரூபாய் ரெண்டு ரூபாயெல்லாம் தெரியாது. என்னைப் பள்ளிக்கூடத்திலே சேர்த்துவிட்டு வரும் போதுகூட ஒருத்தர் கேட்டார்.

''என்ன ஆத்தா... காசு கண்ணி வச்சுக் குடுத்தியா?''

''அதுக்கென்ன ஒரு பச்சநோட்டத் தள்ளிப்புட்டுதானே வந்தேன்.'' எனக்கு விவரம் தெரிந்த பிறகும் கலரை வைச்சுத் தான் பணத்தை முடிவு பண்ணும்.

ரெங்குப்பெட்டியில் அப்பத்தாவின் சேலைகள் நிறைய இருக்கும். கண்டாங்கிச் சேலைகள், கொட்டடி, ஒண்ணு ரெண்டு பட்டு, சுங்கடிச் சேலையென்று நிறைய இருந்தாலும், கட்டியதையே கட்டிக் கொண்டிருக்கும். என் நினைவுக்குத் தெரிந்தவரை மாராப்பெல்லாம் போட்டுக் கொண்டதேயில்லை. கட்டிய சேலையின் மறுதளவைச் சுற்றி லாகவமாகக் கட்டியிருக்கும். சிவப்பென்றால் அப்பத்தாவுக்கு ரொம்பப் பிடிக்கும். அதனாலோ என்னவோ ஒதுக்கப்பட்ட கொட்டடிச் சேலையில் பச்சை நிறமும் நீல நிறமும் கூட இருக்கும். மிகப்பெரிய புலம்பல்கள் ஏற்படுத்திய நிகழ்வுக்குப் பின்னாலேயே சேலை மாறுதல்கள் நடந்திருக்கும்.

''நாதியத்த முள்ளு நார் நாரா கிழிச்சுடுச்சு.''

''என்னப்பத்தா ஆச்சு?''

''வேலி ராட்ட ஒத்தாசைக்குக் கூப்பிட்டுருந்தான் பாவி. கவணைப் புடிச்சு முள்ளை எத்திப் புடிக்கையில பொசுக்குன்னு எடறி எம்மேல விழுந்துருச்சு.''

''ஐய்யய்யோ...''

''இந்தா! நீயேன் ஒப்பாரி வைக்குறே? நான் பிந்தே ஓட டாரு டாரா சேலைதான் கிழிஞ்சு போச்சு. போ... போயி ரெங்குப் பெட்டில இருந்து இதே மாதிரி இன்னொண்ணு இருக்கு... எடுத்து வா.''

அப்பத்தாவின் ஆணைக்குட்பட்டவனாக ஓடிப்போய், புளிப்பானை பக்கத்திலிருக்கும் ரெங்குப் பெட்டியிலிருந்து எடுத்து வந்து நீட்டினேன்.

ஒரு அறைக்குள் கட்டியிருந்தால்கூட கட்டியிருக்காது, இவ்வளவு லாகவமாக. கிழிந்த புடைவையின் முடிவு முனையில் சுற்றத் துவங்கிய புதுச்சேலை முதல் தளவு நுனியிறுதியில் போர்த்தியபோது வெளியேறிக் கிடந்தது. வாரிச் சுருட்டி எடுத்துக் கொண்டேன்.

''எங்கடா கொண்டு தொலைக்கிற?''

''வேறென்னப்பத்தா பண்ண இத?''

''அட கிறுக்குப் பய மவனே... போய் உம்முட்டுத் தலகாணிய எடுத்து வா...'' அது தலகாணி என்றது என் அழுக்கு

**மெய்யாலுமே பொய்**

**'காதல் கிசுகிசு', 'குண்டக்க மண்டக்க'... படங்களைத் தயாரித்த பிரபல ஒளிப்பதிவாளர் எம்.கேசவன், சூப்பர் ஸ்டார் ஆர்ட் மூவி(பி)லிட் நிறுவனத்துக்காக தயாரிக்கும் படம்தான் 'மெய்யாலுமே பொய்!'.**

**''எந்த விஷயத்தையும் மத்தவங்க நம்பணும்னா, சத்தியமா இது உண்மைன்னு சொல்வோம். ஆனால், 'மெய்யாலுமே பொய்' படத்துல வர்ற கதை மெய்யாலுமே மெய் மாதிரி தோணும். ஆனால், மெய்யாலுமே அத்தனையும் பொய். உண்மை உணர்த்தும் செய்தியைவிட பொய் நிகழ்த்தும் கலவரம் ரசனைக்குரியது. அப்படிப்பட்ட பொய் இந்தப்படம்'' என்கிறார் கேசவன். இந்தப் படத்துக்காக மதுரையைச் சேர்ந்த**

மூட்டை தலையணையைத்தான்.

கொடுத்த தலையணையை, நான்காய் மடித்து விரிக்கப்பட்டிருந்த கொட்டடிச் சேலையின் நடுவில் வைத்து எதிர் எதிர் முனைகளால் முடிச்சு போட்டு வைக்கும். அதில் என் தலை எண்ணெய் அழுக்கேறி எண்ணெய்க்கல் நாற்றம் வருமே தவிர, அப்பத்தா உடலிலிருந்து வேர்வை வாசமென்று ஒன்று வந்ததாக ஞாபகமேயில்லை. கொட்டடி இத்தனைக்கும் அப்பத்தாவின் உடம்பு மாதிரி. சிரிக்கும் போது நெளியும், தகிக்கும்போது தகிக்கும். விறகைத் தூக்கி வைத்தால் சும்மாடாகும். வெயிலுக்குக் கொங்காணியாகும். நனைந்த உடல் துவட்டத் துண்டாகும். குளித்து முடிந்துவிட்டுக் கரையேறி வந்து உடுத்திருப்பதையே ஒரு தாழ் மரக்கிளையின் நுனியில் கட்டிக் காயவைக்கும்.

"எவ்வடா தலகாணிய இந்த மாதிரி பாக்குறே? உள்ளே கட்டியிருக்குறது, நாப் புது வருசத்துக்கு முன்னாடி இருந்த கொட்டடி, சும்மா இல்ல. அது நொப்பன் கிடந்தெந்தரிச்ச சீல... நானும் நொப்பச்சியும் அப்படியே வயக்காட்டுப்பக்கம் போனோம்ன்னா, மாட்டைப் பூட்டி நொப்பச்சி உழுக ஆரம்பிக்க, வரப் பொன்டையில நிக்குற வாகைக்கன்னு கவணையில், தொட்டியக் கட்டி ஒரு கவம் பால குடுத்துப்புட்டு, ஒரு ஆட்டு ஆட்டி விட்டுட்டு வந்தா போதும்... என் மடிவா சந்துல தூங்குறகணக்கா கொட்டடிச் சேலை வாசத்திலேயே தூங்கிப் போவான் நொப்பன்.

என் ராசா... நெனச்சா பத்தியெரியுது. பாழாப்போன பாம்பாத்து தண்ணில கூட்டு வண்டியோட கொடஞ்சாய, ஒன்ன விட்டு ஒன்னு போகாத மாதிரி நோத் தாளையும் சேர்ந்து கொண்டு போனத நினைச்சா... நீ மட்டுந்தான் மிச்சம். இன்னொரு சீலையில நீ கிடந் தெந்திரிச்ச, அடப்போடா எம்புட்டு ஒவ்வொண்ணும் ஒவ்வொர்த்த கதை பேசும்."

அப்பத்தா கண்கலங்கிப் பார்க்கும்போது, அப்பா அம்மா இல்லா ஞாபகத்தை விட, அது அழுகிறது பார்த்தா தான் என் கண்ணும் கசியும்.

**அ**ப்பத்தா கொட்டடிச் சேலை. அது புலம்பலில் சுயநல வரலாறாய் விரிவதென்னவோ உண்மையென்றாலும், அந்தச் சேலையின் பின்னால் இன்னும் நிறைய இருக்கிறதென்பது அது மறந்த உண்மையென்றாலும், என் கண்ணை மறைத்ததில்லை. அது எத்தனையோ குழந்தைகள் உருண்டு எழுந்த சேலை.

விடிவதற்குள்ளாகவே தூரத்திலிருந்து வந்திருப்பவர் சைக்கிளை தலைவாசலில்



சுபாஷ் கதாநாயகனாகிறார். இவர் பல விளம்பரப் படங்களுக்கு மாடலாக இருந்தவர். முக்கியமான வேடத்தில் அறிமுகமாகும் மலாய் சீனு, நம்ம ஊர் அப்பா கேரக்டர் புகழ் விஜயகுமார் மாதிரி, மலேசியா சினிமாவின் இன்ஸ்பெக்டர் புகழ். கேரள கதாநாயகி நீனு கார்த்திகாவுக்கு இதுதான் முதல் தமிழ்ப்படம்.

- வித்யா

நிற்க வைத்து ஸ்டாண்ட் போடுவதற்குள்ளாகவே பதறிக் கொண்டு வரும் அந்த அம்மா; கையில் பச்சிளம் குழந்தையுடன்.

''ஆத்தாவ காணும். பேரன்தான் படுத்துக் கிடக்கிறான் மச்சான்.'' வந்தவர், கொஞ்சம் உரக்கவே கேட்பார்.

''எங்கப்பா ஆத்தா?''

கண்களைக் கசக்கிய படி எழுந்து வரும் என் பதிலுக்கான எதிர்பார்ப்பில் அப்பத்தாவின் அத்தியாவசியம் புரிந்து போயிருந்தாலும், எனக்குப் புதுசில்லை. நினைவு தெரிஞ்ச நாளிலிருந்தே பழக்கப்பட்ட ஒன்றுதான் இது.



**அடுத்த வருஷம் தீபாவளி, தேதின்னு ஏதாவது ஒண்ணுக்கு ஒரு கொட்டடிச் சேலை எடுத்துத் தா.**

''இப்படி திண்ணையில் உட்காருங்க. அப்பத்தா பலகாரக்கடைப் பக்கம் போயிருக்கு... வந்துரும்.''

கண்களில் அப்பத்தா தென்பட்டதும்,

''ராப்பூராவும் ஒரே அழுகை, புள்ளை அழுகிறதவிட இவ அழுகை என்னைத் தூங்கவிடல, விடியட்டுமுன்னு இருந்தோம். விசாரிச்சோம். பொறைகிறை விழுந்திருக்கும். ஆத்தாகிட்ட கூட்டிக்கிட்டுப் போங்கன்னாங்க. அதான்தா...'' அவர் பேசிக் கொண்டிருக்கும்போதே குழந்தையை வாங்கி அப்பத்தா தூக்கிப் பிடித்தபடி மெதுவாய் ஆங்காங்கே அமுக்கிப் பார்த்து, எந்த இடத்தைப் பிடிக்கும்போது குழந்தை வீறிட்டு அழுகிறதோ அந்த இடத்தை நீவிவிட்டுத் திட்டவும் செய்யும்.

''ஏம் புள்ள... ஏன் புள்ளையத் தூக்கி தெரியாதவங்ககிட்ட குடுக்கறே...?''

''ஆசைப்பட்டுத் தூக்கறப்ப முடியாதுன்னாத்தா சொல்றது?''

''இப்ப வந்து நிக்கறது யாரு அவுங்களா?'' என்றபடியே என்பக்கம் திரும்ப, நான் ஓடிப் போய் கொட்டடிச் சேலையில் ஒன்றைக் கொண்டு வந்து நீட்டியபடியே நிற்பேன். ஒத்தக் கையால் அலக்காக குழந்தையைத் தூக்கியபடி, அழகாய் ஒரு கொஞ்சல் கொஞ்சும் ''என்னய்யா! என் ராசா''வென. இரண்டாய் மடித்த சேலையை குழந்தையின் அம்மா ஒரு பக்கம் புடிக்க அப்பத்தா ஒரு பக்கம் புடிக்க, அந்தம்மாவின் கணவர் குழந்தையை வாங்கிச் சேலை நடுவில் போட, அப்பத்தா சொல்லும் சாய்வில் குழந்தையை உருட்டும்போது அநேகமாய் குழந்தை உச்சகட்டமாகக் கத்தி அழுவது அப்போதாகத்தான் இருக்கும். படிப்படியாக அழுகை குறைந்து தூங்க ஆரம்பிக்க, திண்ணையிலேயே ஒரு மணி நேரம் படுக்கவைத்து அனுப்பி வைப்பது வழக்கமானதுதான்.

''எம்புட்டுத்தா?''

''அவசரத்தில் என்னத்தக் கொண்டாந்தியோ... பச்சப்புள்ள கத்தினா கையும் ஓடாது. காலும் ஓடாது. அடுத்த வருஷம் தீபாவளி, தேதின்னு ஏதாவது ஒண்ணுக்கு ஒரு கொட்டடிச் சேலை எடுத்துத் தா போ...ப்பா...''

அபூர்வமாக யாராவது வாங்கி வந்து கொடுப்பதும் உண்டு.

**எ**ன்னமோ தெரியல... டீ.வி. பாக்குறது எனக்குப் பிடிக்காதுதான். வேறென்ன செய்ய முடியும்? இன்னைக்கு லீவு. முன்

பெல்லாம் வேலைக்குப் போனோமா நாலு நண்பர்களோட தங்கியிருந்தோமான்னு ஆகிப்போச்சு. அங்க கூட என்பேருக்கு முன்னாடி அழுக்கு மூட்டை போன்ற அடைமொழி கூட ஒட்டியிருக்கும். அப்பத்தா இருந்தவரை, ஊருக்குப் போய்வர இருந்தேன். அது இறந்து போனபோதுதான் கடைசியாய்ப் போனது. பங்காளி, கூட்டுப் பங்காளியோட பெண்கள் என்று வந்தவர்கள், அழுக்கு மூட்டை தவிர மற்ற துணிகளை எடுத்துச் சென்றுவிட்டனர், 'இவனுக்கு எதுக்கு அது'வென்று.

வீடு வாசலை அடைத்து வைத்துவிட்டு, அழுக்கு மூட்டைத் துணிக்குள் இருக்கும் அப்பத்தாவின் நினைவோடும் ரெங்குப் பெட்டியோடும் சென்னை வந்தவன்தான். வேலை பார்த்து ரூமில் ஷேர் பண்ணி, வேலை பார்த்த கம்பெனியிலேயே, காதலித்த பெண்ணைத் திருமணம் முடித்து, இன்றோடு பத்து நாளாகுது. ஒன்றாய் உட்கார்ந்திருக்கோம் டீ.வி. பார்த்துக் கொண்டு. என்னையும் அறியாமல் அந்த சீரியல் எனக்குள் கலங்கடித்துக் கொண்டுதான் இருந்தது. அப்பத்தாவைப் போலவே அந்த உருவம் புடைவை கட்ட, பனிச் சென்று முழுவதுமாக என்னைப் பழைய நினைவில் மூழ்கடித்திருந்தது.

மனத்தில் ஏதோ ஒன்று உறுத்த மெதுவாய் ஒரு முறை ரெங்கு பெட்டியைத் திறந்து அழுக்கு மூட்டையை அவிழ்த்து பழைய என்னைப் பார்க்கத் துடித்தது மனது. ரெங்குப் பெட்டியைத் திறந்து போது அதிர்ந்துபோனேன்.

''ஏம்மா எங்கம்மா இதிலிருந்த கொட்டடிச் சேலை மூட்டை?''

''ஏங்க...? சும்மாதான் இருக்குன்னுட்டு வேஸ்ட் துணி வாங்கிறவன்கிட்ட போட்டுட்டேன். மூணு வாளி, ஒரு பேசின் தேறுச்சு... ஏன்? நீங்க காலையில குளிக்கையில பாக்கலையா புது வாளியை..?''

என் கோபம் தலைக்கேற அவளை ஏதாவது கேட்க வேண்டும் போலிருந்தது. அறைக் கதவை வேகமாய்த் தள்ளி வரண்டாவில் தேட, டி.வி. எதிரில் அவள் இல்லை. தேடினேன்; பூஜையறைக்குள் நின்றிருந்தாள்.

''இங்க என்ன பண்ற?''

''அந்தப் பாட்டியோட பொண்ணா வர்றது எங்கம்மா மாதிரியே இருக்குங்க... பாக்கப் பாக்க அம்மா ஞாபகமா வந்துச்சு அதான். வர்றப்ப அம்மா புடைவை ஒண்ணு கொண்டு வந்தேன். சாகுறதுக்கு முன்னாடி இதத்தான் கட்டியிருந்தாங்க'' என்று கையில் வைத்திருந்த புடைவையைத் தடவிக் கொண்டிருந்தாள். காயம் பட்டவனால் மட்டுமே வலியை உணர முடியும்; கலங்கிய கண்களோடு திரும்பினேன். அந்த கொட்டடிச் சேலை ஞாபகங்களை வாங்கியவன் எங்கிருப்பான்? ●



''பக்கத்து வீட்டுக்காரிக்கு வசதி கூடிடுச்சுபோல!''

''எதை வச்சுடி சொல்ற?''

'' 'துவரம் பருப்பு' போட்டுல்ல சாம்பார் வைக்கிறா... அதை வெச்சுத்தான்!''

*- ராசை உ.குணசீலபாண்டியன்*

பாடல் மற்றும் சண்டைக் காட்சிகள் எடுக்கும்போது ஒரு கேமராவுக்குப் பதிலாக இரண்டு அல்லது மூன்று கேமராக்களைப் பயன்படுத்துவது ஒளிப்பதிவாளர்கள் வழக்கம். அப்போது மெயின் கேமராவை ஒளிப்பதிவாளரும், மற்றவற்றை அவரது சீனியர் அஸிஸ்டன்ட்டுகளும் கையாளுவர். அயன் படத்தின் சில காட்சிகளில் இரண்டு கேமராக்களைப் பயன்படுத்தினோம். ஆனால், இரண்டாவது கேமராவைப் பயன்படுத்திய காட்சிகளின்போது, பிரபு தம் அஸிஸ்டன்டுக்குப் பதிலாக, உரிமையோடு என்னையே இரண்டாவது கேமராவில் படம்பிடிக்கச் சொன்னார்.

சண்டைக்காட்சிகளை எடுக்கும்போது அனைத்து வேலைகளையும் ஸ்டண்ட் மாஸ்டர் பார்த்துக் கொள்வார். இயக்குநருக்கு அங்கு அதிக வேலை இருக்காது! அதே போல கேமராமேன் பிரபுவே லைட்டிங்கைக் கவனித்துக் கொள்வார் என்பதால், ஷாட் ரெடி என்றவுடன் கேமராமேனுடன் சேர்ந்து நானும் படம்பிடிக்க வேண்டியதுதான். நாங்கள் இரண்டு பேரும் ஒருவரையொருவர் மிக நன்றாகப் புரிந்து கொண்டவர்கள் என்பதால் இது சாத்தியமாயிற்று. அயன் படத்தின் ஒளிப்பதிவால் கவரப்பட்டு, நடிகர் விஜய், தம் அடுத்த படத்துக்கு ஒளிப்பதிவு செய்ய பிரபுவை அழைத்திருக்கிறார்.

நான் முதன்முதலாக இயக்கிய 'கனாக் கண்டேன்' படத்தின் முதல் பாதியில் பிருத்விராஜ் ரொம்பவும் நல்லவர் என்று படம் பார்க்கிறவர்கள் நம்பிக் கொண்டிருப்பார்கள். இரண்டாவது பாதியில்தான் அவருடைய வில்லன் முகம் வெளிப்படும். ஹீரோவாக நடித்து ரசிகர்களுக்குப் பரிச்சயமான ஒருவர் அந்த கேரக்டரில் நடித்தால்தான் இவர் உண்மையில் வில்லன் இல்லை என்கிற சஸ்பென்ஸ் காப்பாற்றப்படும் என்று அந்த கேரக்டருக்காக முதலில் மாதவனை அணுகினேன்.



ஒரு தீபாவளிக்கு முந்தைய மாலை நேரம், பட்டாசு சத்தத்துக்கு நடுவில் மாதவனுக்கு நானும், எழுத்தாளர்கள் சுபாவும் கதை சொன்னோம். அவர் கேட்ட முதல் கேள்வி, ''எனக்குப் படத்துல பாட்டு உண்டா?''

இல்லை என்றதும், ''நான் இப்போது மணி ஸாரின் ஆய்த எழுத்து படத்தில் ஒரு நெகடிவ் ரோல்தான் செய்துகொண்டிருக்கிறேன். இதுவும் நெகடிவ்வா இருக்கே?'' என்றார். ''வேண்டுமானால், படத்தில் வரும் ஹீரோ கேரக்டரில் நான் நடிக்கிறேன்'' என்றார். ''அந்த கேரக்டரில் ஸ்ரீகாந்த் நடிப்பது என்று முடிவாகிவிட்டது'' என்றேன். ஆக, மாதவன் சம்மதம் கிடைக்கவில்லை.

சூர்யாவின் முதல் படமான 'நேருக்கு நேர்' படத்துக்கு நான்தான் கேமராமேன். அவரை அப்போதிருந்தே நெருக்கமாக அறிவேன். என் முதல் படத்தில் அந்த பவர்ஃபுல் ரோலில் சூர்யா நடிக்க வேண்டும் என்று நான் ரொம்பவும் ஆசைப்பட்டேன். சூர்யாவுக்கும் கதை கேட்க ரொம்ப ஆர்வம்.

மும்பையில் இரவு முழுக்க காக்கி படத்துக்கு ஒளிப்பதிவு செய்துவிட்டு, அதிகாலை விமானம் பிடித்து சென்னை வந்து, காலை பத்து மணிக்கு சூர்யாவைச் சந்தித்தேன். நான் சொன்ன கதையைக் கேட்டுவிட்டு அவர் ஒன்றுமே பேசாமல் அமைதியாக இருந்தார். அவர் வில்லனாக நடிக்கத் தயங்குகிறார் என்று என்னால் யூகிக்க முடிந்தது. ''வில்லன்,




# "வாய்ப்பைத் தவறவிட்டேன்..!"

## -வருந்திய விக்ரம்

கே.வி.ஆனந்த்





# "கதையெல்லாம் சொல்லவேண்டாம். உங்க படத்துல நான் நடிக்கிறேன்!" -பிருத்விராஜ்

ஹீரோ என்றெல்லாம் பார்க்காதீங்க! இது ரொம்ப அழுத்தமான கேரக்டர். படம் முடிந்ததும், ரசிகர்கள் மனசுல உங்கள் கேரக்டர்தான் நிற்கும்'' என்றேன். ஆனால் சூர்யா, ''வேணாங்க! கேரக்டர் ரொம்ப நெகடிவ்வா இருக்கு'' என்று மறுத்து விட்டார்.

அடுத்து பிரசாந்தைப் பார்த்து கதை சொன்னேன். அவருக்குக் கதை ரொம்பவும் பிடித்தது. ஆனாலும் பிரசாந்தின் அப்பா தியாகராஜன், ''என்ன வில்லன் ரோல்ல நடிக்கக் கூப்பிடறீங்க?'' என்று கேட்டார். நான் சூர்யாவிடம் சொன்னதையே அவரிடமும் சொல்லி கன்வின்ஸ் செய்ய முயன்ற போது, ''கிளைமாக்ஸ்ல ஸ்ரீகாந்த் போட்டுப் புரட்டி எடுப்பாரில்ல? பிரசாந்த் அடிவாங்கணுமில்ல?'' என்று என்னை மடக்கினார்.

புரொடியூசர் ஏ.எம்.ரத்னம் யதேச்சையாக விக்ரமிடம் கதையைச் சொல்லி, ''நடிக்கிறீர்களா?'' என்று கேட்டபோது, அவரும் மறுத்துவிட்டார்!

ஒரு மலையாளப் படத்தில் பிருத்விராஜைப் பார்த்துவிட்டு அவரிடம் பேசினேன். ''காக்கி போன்ற இந்திப் படங்களில் உங்கள் ஒலிப்பதிவைப் பார்த்து ரசித்திருக்கிறேன். நீங்கள் எனக்குக் கதை சொல்ல வேண்டிய அவசியமே இல்லை. இப்போதே என் சம்மதத்தைத் தெரிவிக்கிறேன்'' என்று சொல்லிவிட்டார். அந்தப் படத்தில் அவரின் நடிப்பு பேசப்பட்டது.

ரிலீஸ் ஆனதும் படம் பார்த்துவிட்டு, ''என்னை பிருத்விராஜ் கேரக்டரில் நடிக்கும்படி கேட்டபோது, வில்லன் கேரக்டர் என்று சொல்லி மறுத்துவிட்டேன். படம் பார்த்துவிட்டு, அந்த கேரக்டர் ஏற்படுத்திய பாதிப்பில் நான் இரவு தூங்கவில்லை. இப்போது ஒரு நல்ல கேரக்டரில் நடிக்க வந்த வாய்ப்பினைத் தவறவிட்டு விட்டேனே என்று நினைக்கத் தோன்றுகிறது'' என்று விக்ரம், குமுதத்துக்கு அளித்த பேட்டியில் குறிப்பிட்டார். சூர்யா எனக்கு ஃபோன் செய்து, ''சூப்பர் கேரக்டர். நீங்கள் கதை சொல்லும்போது அது இத்தனை அழுத்தமான கேரக்டர் என்று எனக்குத் தெரியவில்லை'' என்றார்.

கதைதான் படத்துக்கு முதல் ஹீரோ. அது விறுவிறுப்பாக நகர வேண்டும். இந்தக் கருத்தை சிறு வயது முதலே எனக்குள் ஏற்படுத்திய ஹீரோ இரும்புக் கை மாயாவிதான். யோசித்துப் பார்த்தால் எம்.ஜி.ஆர்., சிவாஜி, ரஜினி, கமல் - இவர்கள் எல்லாரையும் விட ஒரு சூப்பர் ஹீரோவாக இரும்புக் கை மாயாவி என் மனத்தில் ஏற்படுத்திய பாதிப்புகள் அதிகம்.

(ஆக்ஷன் தொடரும்)

எழுத்து வடிவம்: **எஸ்.சந்திரமௌலி**

# கிடைக்குமா கின்னஸ்..?



* சேகரித்த டிக்கெட்டுகள்

* செந்தில் கைவண்ணத்தில்...

''புதுமையான விஷயங்கள் பத்தி கேள்விப்பட்டாலோ, பார்த்தாலோ என்னால சும்மா இருக்க முடியாது. நாமும் அப்படிச் செய்தா என்னன்னு பரபரப்பாயிடுவேன். அப்படித்தான் புதுக்கோட்டையைச் சேர்ந்த ஒருத்தர் முப்பதாயிரம் பஸ் டிக்கெட்டைச் சேகரிச்சு கின்னஸ் புத்தகத்துல இடம்பிடிச்சதைப் படிச்சேன். அந்தச் சாதனையை முறியடிக்கணும்னு களத்துல இறங்கினேன். இப்ப என்கிட்டே ஐம்பதாயிரம் பஸ் டிக்கெட்ஸ் இருக்கு. கின்னஸுக்கு அப்ளை பண்ணி இருக்கேன்'' என்று சொல்லும் செந்திலின் கண்களில் துறுதுறுப்பு + சுறுசுறுப்பு.

'சரி! இந்த மாதிரி ஏதாவது ஒரு சாதனையை நிறைய பேர் செய்துக்கிட்டுதானே இருக்காங்க' என்று சாதாரணமாக நினைத்து விடாத படி, செந்திலின் பன்முகத்தன்மை நம்மை ஈர்க்கிறது.

* செந்தில்

''நாவல் ஒண்ணு எழுதி வெளியிட்டிருக்கேன். கவிதை எழுதுவேன். ஓவியம் வரைந்து பரிசுகள் வாங்கியிருக்கேன். 'ஐந்தாவது தூண்' லஞ்ச ஒழிப்பு அமைப்பில் உறுப்பினராகியிருக்கேன்'' என்று அடுக்கிக் கொண்டே போகிறார்.

செந்தில், வேளாண் கல்லூரியில் படித்து விவசாயம் சார்ந்த பணியில் இருக்கிறார். ''ஒரு நாட்டோட முதுகெலும்பே விவசாயம்தான். எல்லோரும் வொயிட் காலர் வேலையே பார்க்கணும்னா, வயித்துக்கு என்ன பண்றது? நான் ஒரு விவசாயின்னு சொல்லிக்கறதுல பெருமைப்படறேன்'' என்கிறார்.

''கனவு காண்பது சுலபம்ங்க. எல்லோரும்தான் கனவு காண்றாங்க. அதை நனவாக்கறது அவங்கவங்க செயல்கள் தான். செய்யற செயலில் ஆர்வமும், மன நிறைவும் இருந்தா வெற்றி நிச்சயம்'' என்கிறார் செந்தில். உண்மை தானே!

– திலீபன்



# ஜூஸா... கஞ்ஜூஸா?

● வெ.ராம்குமார், வேலூர்

**கிரேஸி எப்படி? கழுவுற மீன்ல நழுவுற மீனா? சிக்கிய பிறகு முழிக்கிற மீனா?**

நாம் எல்லோருமே 'வாட் டு யூ மீன்?' என்று நழுவுற selfish மீன். சிக்கிக் கொண்டால் 'ஐ மீன் வாட் ஐ மீன்' என்று கர்ஜிக்கும் இடி-அமீன்!

● எஸ்.பிரசன்னகுமார், காட்பாடி

**மாதா, பிதா, குரு, தெய்வம் வரிசை யில் வேறு யாரைச் சேர்க்கலாம்?**

சேர்ப்பதற்கு இது என்ன Q வரிசையா? பெரியவர்கள் சொல்லிவிட்டுப் போன சீர்வரிசை.

● அ.யாழினிபர்வதம், சென்னை

**கிரேஸிக்கு பழமாகச் சாப்பிடப் பிடிக்குமா? இல்லை ஜூஸ் போட்டுக் குடிக்கப் பிடிக்குமா?**

மடக்கென்று ஜூஸை ஒரே மூச்சில் குடித்து முடித்து விடுவோம். பழமென் றால் நிதானமாக நறுக்கி ஒவ்வொரு சுளையாகச் சாப்பிடலாம். பழ விஷயத்தில் நான் கொடுத்த காசுக்கு நிதானமாகச் சாப்பிடும் 'கஞ்ஜூஸ்'.

● மு.மதிவாணன், அரூர்

**ஆடை இல்லாத மனிதன் 'பாதி மனிதன்', காசு இல்லாத மனிதன்?**

கடன் பாக்கி வைக்கும் 'மீதி மனிதன்'.

● பா.அசோக், விருதுநகர்

**உங்களுக்குப் பிடித்த B.F. (Best Friend)?**

P.F. Provident Friend - சகாய வைப்பு நிதி நட்பு!

● என்.சங்கரதாஸ், ஸ்ரீவில்லிபுத்தூர்

**ஆணின் வெற்றிக்குப் பின்னால் ஒரு பெண் என்றால், ஒரு பெண்ணின் வெற்றிக்குப் பின்னால்?**

அந்த ஆணின் தோல்வி. ஆணின் தோல்வியை மறைப்பதில் அந்தப் பெண் வெற்றி காண்கிறாள்.

● ஜி.ஆர்.ராகவன், காஞ்சிபுரம்

**Gracy-மோகன், Crazy-மோகன், Cozy-மோகன்... இதில் உங்கள் நிஜமுகம் எது?**

சிரிக்க வைக்கும் சுமுகம். Easy-மோகன்!

● கைலாஷ், கண்டியன்கோவில்

**கடைக்கண் பார்வை என்றால் என்ன?**

'விண்டோ ஷாப்பிங்.'

● ஏ.கே.நாசர், டி.ஆர்.பட்டினம்

**வீட்டுக்கு வந்த விருந்தினர்கள் போகாமல் அதிக நாள் தங்கினால் என்ன செய்வது?**

நீங்கள் மூட்டை முடிச்சோடு அந்த விருந்தினர் வீட்டில் போய்த் தங்கி விடுங்கள். Exchange Offer வழி இதுதான்!

● **குலசை நஜ்முதீன், காயல்பட்டினம்**

*கடவுள் எப்போது கொட்டாவி விடுவார்?*

மனிதன் சோம்பல் முறிக்கும்போது!

● **வாசுதேவன், அயிரோலி**

*ராஜேஷ் வைத்யாவின் வீணை வாசிப்பு?*

**நல்லவேளை... கேள்வி கேட்டவரைப் பிழிஞ்சு ஜூஸ் போடாம விட்டீங்களே...**



நல்லதோர் வீணை செய்தே அது நலம் பெற, நான்முகன் பத்தினி ராஜேஷ் வைத்யாவிடம் கொடுத்து விட்டாள். வைத்யாவின் கை எதுகை; வீணை மோனை; இணைந்து செயல்படுவது கவிதை!

● **முத்து ஆனந்த், வேலூர்**

*மௌனம் சம்மதமா?*

தக்ஷிணாமூர்த்தியின் மௌனம் சாஸ்வதம்.

● **ப்ரியா, சென்னை**

*கிரேஸி நீங்கள் என்ன ராசி?*

ஜீவராசி!

● **தர்மசீலன், பெங்களூர்**

*பலவீனம் - விளக்கம்?*

பலம், ஈனச் செயலில் ஈடு பட்டால் பலவீனமாகிறது.

**அடுத்த வாரம் அதிரடியாய்...**
**கிரேஸி ட்ரீட்**

**வாசகர்களின் கூப்பன் கேள்விகளுக்கான மெனுவில் கிரேஸியின் பதில் ட்ரீட்!**

அமரர் கல்கி

காஞ்சிமா நகரின் மாடவீதியிலே குந்தவிதேவி பல்லக்கில் சென்று கொண்டிருந்தாள். திருக்கோயில்களுக்குச் சென்று உச்சி கால பூஜை நடக்கும்போது சுவாமி தரிசனம் செய்துவிட்டு வரும் நோக்கத்துடன் அவள் சென்றாள்.

திடீரென்று வீதியில் ஒரு மதில் சுவரின் திருப்பத்தில் அபூர்வமான காட்சி ஒன்றைக் கண்டாள். சகல இராஜலட்சணங்களும் பொருந்திக் களை ததும்பும் முகத்தினனான ஓர் இளங்குமரன், ஒரு குதிரை மீது வந்து கொண்டிருந்தான். அவனுடைய உடம்பையும் கைகளையும் குறுக்கும் நெடுக்குமாய் இரும்புச் சங்கிலியினால் பிணைத்திருந்தார்கள். குதிரையின் இரு பக்கத்திலும் முன்னாலும் பின்னாலும் அந்தச் சங்கிலிகளைப் பிடித்துக்கொண்டு போர் வீரர்கள் சிலர் விரைந்து நடந்து வந்தார்கள்.

# மின்னல் சந்திப்பு



அந்த இளங்குமரன் மிகவும் களைத்துப் போன தோற்றமுடையவனாயிருந்தாலும், அவனுடைய முகத்தில் கொஞ்சமாவது அதைரியத்தின் அறிகுறி காணப்படவில்லை. அஞ்சா நெஞ்சங்கொண்ட தீர புருஷனாகவே தோன்றினான். "என் உடம்பைத்தானே சங்கிலிகளால் பிணிக்க முடியும்? என் உள்ளத்தை யாராலும் சிறைப்படுத்த முடியாதல்லவா?" என்று அலட்சியத்துடன் கேட்பதுபோல் இருந்தது அவனுடைய திருமுகத்தின் தோற்றம்.

இந்தக் காட்சியைக் கண்டதும், குந்தவி தேவியின் விசாலமான நயனங்கள் ஆச்சரியத்தினால் இன்னும் அதிகமாக விரிந்தன. அதே சமயத்தில் அந்த இளைஞனும் சக்கரவர்த்தியின் குமாரியைப் பார்த்தான். சொல்லுக் கெட்டாத அவளுடைய திவ்ய சௌந்தரியம் ஒரு கண நேரம் அவனைத் திகைப்படைந்து நிற்கும்படி செய்திருக்க வேண்டும். அடுத்த நிமிஷத்தில், பல்லக்கும் குதிரையும் ஒன்றையொன்று தாண்டிச் சென்று விட்டன. குந்தவி பல்லக்கிலிருந்தவண்ணம் இரண்டொரு தடவை திரும்பித் திரும்பிப் பார்த்தாள். குதிரை மீது சங்கிலியால் கட்டுண்டிருந்த அந்த இளங்குமரனும் தன்னைப் போலவே ஆவல் கொண்டவனாய்த் திரும்பிப் பார்ப்பான் என்று அவள் எதிர்பார்த்தாளோ என்னவோ, தெரியாது. ஆனால் அந்தக் குமரன் மட்டும், தலையை ஓர் அணுவளவு கூடப் பின்புறமாகத் திருப்பவில்லை.

- 'பார்த்திபன் கனவு' புதினத்திலிருந்து...



# ஃபிஃப்ட்டி – ஃபிஃப்ட்டி ப்யூட்டி

ப்ளவுஸ், ரவிக்கை, சோளி... என பல பெயர்கள். ஒரு பெண் புடைவையில் அழகாக இருக்கிறாள் என்றால் அதில் 50 சதவிகிதப் பங்களிப்பு ப்ளவுஸினால்தான் என அடித்துச் சொல்லலாம்.

பல வருடங்களுக்கு முன்னால் பெண்மணிகள் எந்தப் புடைவைக்குமே வெள்ளை ப்ளவுஸைப் போட்டு வளையவந்து கொண்டிருந்தார்கள். பிறகு வெள்ளை, கறுப்பு கலரில் சிக்கன் வொர்க் ப்ளவுஸ் போட்டுச் சந்தோஷப்பட்டனர்.

இப்போது சில வருடங்களாகப் புடைவையிலேயே அட்டாச்டு ப்ளவுஸ் இருப்பதால், மாட்சிங் ப்ளவுஸ் துணி தேடி கடை கடையாக அவ்வளவாக ஏறி இறங்குவதில்லை. பொதுவாக ப்ளவுஸ் துணி என்றால் டு பை டு. ரூபியா, பாலியெஸ்டர், காட்டன், சில்க்... என வெரைட்டி உண்டு. அதில் 75 சென்டிமீட்டரிலிருந்து 1 மீட்டர் வரைக்கும் அவரவர் உடல்வாகுக்கு ஏற்ப.



ஒரு ப்ளவுஸில் மிக முக்கியமாக அட்ராக்ட் பண்ணும் அம்சம் நெக்லைன் மற்றும் ஸ்லீவ் டிஸைன்தான். நாளொன்றுக்கு பாட்டர்ன், ஸ்டைல் மாறுகிறது.

முன்னேயெல்லாம் ப்ளவுஸ் என்றால் ரவுண்டு நெக் முன் பின் பகுதிகளுக்கு. ஸ்லீவும் சாதாரண ப்ளெயின் டிஸைன்தான். ஆனால் இன்று நெக் மற்றும் ஸ்லீவ் டிஸைனில் ஒரு ஃபேஷன் புரட்சியே நடந்து கொண்டிருக்கிறது.

ஹால்டர் நெக், போட் நெக், யூ நெக் போன்ற டிஸைன்கள் தற்சமயம் பாப்புலர். ஸ்லீவ் மற்றும் நெக்கில் ஜரிகை பார்டர், ஸீக்வென்ஸ், பைப்பிங் போன்ற எக்ஸ்ட்ரா வஸ்துக்களை புடைவைக் கலருடன் மாட்ச் செய்து போட்டால் சூப்பர் ஸ்டைல் பெண்ணாக வளையவரலாம்.

கொஞ்சம் மாடர்ன், ஃபேஷனான பெண்கள் ட்ரெண்டியாக ட்ரஸ் பண்ண ஆசைப்படும் பெண்கள், ப்ளவுஸ் நெக் மற்றும் பின்பகுதி மிக இன்னோவேட்டிவாக இருக்க வேண்டும் என ஸ்வீட்டாகப் பிடிவாதம் பிடிக்கிறார்களாம்.

கைப்பகுதியில் விசிறி மடிப்பு, மோடிவ், கற்கள், குந்தன் மற்றும் முதுகுப் பகுதியில் ஸ்ட்ரிங், பீட்ஸ், கிறிஸ்டல் என வைத்து அசத்துகிறார்கள்.

ஒரு சாதாரணப் புடைவையே கூட நீங்கள் போடும் வித்தியாசமான ப்ளவுஸினால் கூட்டத்தில் தனித்து நிற்கும். ப்ளெயின் ஸாரியுடன் பாந்தினி

ப்ளவுஸ், ஜரிகை பார்டர் வைத்த ப்ளவுஸ், பார்டர் வைத்த கஞ்சி காட்டன், கன் ப்ளவுஸ், (புனே ப்ளவுஸ்)... இப்படி வெரைட்டியாகப் போடலாம்.

ஸ்லீவ் பகுதிக்கு ஏகப்பட்ட திருநாமங்கள். ஃபுல் ஸ்லீவ்ஸ் (சென்னை வெயிலுக்கு ஒத்துக்காது), ஹாஃப் ஸ்லீவ்ஸ், நூடுல்ஸ் ஸ்ட்ராப், ஸ்லீவ்லெஸ், பெல் ஸ்லீவ்ஸ், பட்டர்ஃப்ளை, த்ரீஃபோர்த் ஸ்லீவ்ஸ், பஃப் ஸ்லீவ்ஸ்... என ஏராளம். ஒரு மிக அழகான புடைவையைக் கூட கெடுத்துக் குட்டிச்சுவராக்கும் சர்வவல்லமை படைத்தது ப்ளவுஸ். சரியாகத் தைக்காதது, மிக டைட்டான அல்லது மிக லூஸான ப்ளவுஸ், தோள்பட்டை ஸ்லிப்பாகி இறங்கிக் கொண்டேயிருக்கும் அவஸ்தை, பின் இறக்கம் அதிகம் வைக்காமல் 'ஏறி' விடும் ப்ளவுஸ்... எனக் கோளாறு பட்டியல் வெகு நீளம். இன்றும் டெய்லரிடம் மணிக்கணக்காகப் புரியவைக்கும் பெண்களைப் பார்க்கலாம்.

டிஸைனர் ப்ளவுஸ்களுக்கு இன்று டிமாண்ட். இதற்கு ஆகும் செலவும் எக்கச்சக்கம். லைனிங் வைத்துத் தைக்கும் ப்ளவுஸின் தையல் கூலியில் ஒரு புடைவை வாங்கி விடலாம். இருந்தாலும் நல்ல டிஸைனர் சோளி கண்டிப்பாகத் தேவை.

இந்திராகாந்தி, சோனியா காந்தியின் ப்ளவுஸ் என்றுமே பாப்புலர். ''எப்படி கழுத்து மூடி, இடுப்பு வரைக்கும் இறங்கி ஸ்லீவும் முழங்கை வரை... எப்படித்தான் அரைச்சுப் பூசினா மாதிரி போட்டுக்கறாங்களோ'' என பெருமூச்சு விடும் பெண்கள் ஏராளம்!

ஜுவல்லரி கை, காது, கழுத்துக்கு என்றில்லாமல் ப்ளவுஸில் ஏகமாக ஜுவல்லரி அட்டாச் பண்ணித் தைப்பது ஃபேஷன் என்றாகிவிட்டது. டை அப் ப்ளவுஸ் (நாடா வைத்து கட்டியது) இளம்பெண்களுக்குப் பொருத்தமான ஒரு டிஸைன்!

- லதா சேகர்



ஒரு முழு நீள சினிமாவுக்கான அத்தனை அம்சங்களையும் குறும்படத்தில் தர முடியுமா? முடியும் என்று நிரூபித்திருக்கிறது 'செடி' என்கிற இந்தப் படம்.

மணி, ஒரு கழைக்கூத்தாடி. சைக்கிளில் வித்தை காட்டுவது, சிலம்பக் குச்சியின் இருபுறமும் நெருப்பைக் கட்டி லாகவமாகச் சுழற்றுவது, திடீரென்று குள்ள மனிதனாக மாறுவது, மிக உயரமான ஆளாக உருவெடுப்பது என்று பல கலைகளைக் கற்று வைத்திருக்கும் திறமைசாலி. அவனுக்கு ஏழு வயதில் வர்ஷா என்று ஒரு மகள். அவளையும் அழைத்துக் கொண்டு தெருத்தெருவாகப் போய் வித்தைகாட்டுவான்.



## குறும்படம்

ஓர் இடத்தில் கலா என்கிற சித்தாள் வேலை பார்க்கும் பெண், மணிக்கு அறிமுகமாகிறாள். அவளுக்கு உறவு என்று சொல்லிக் கொள்ள வயதான தாய் மட்டும்தான். வறுமையில் முகிழ்த்த அன்பு, வெகு இயல்பாக இரு குடும்பங்களையும் நெருக்கமாக்குகிறது. கலா தங்கியிருக்கும் இடத்துக்குப் பக்கத்திலேயே ஒரு கூடாரத்தை அமைத்துக் குழந்தையுடன் தங்குகிறான் மணி. ஒரு கட்டத்தில் மணியின் முதல் மனைவி இறந்து போனதையும், அவனுடைய நல்ல மனத்தையும், தாயின் அரவணைப்பில்லாமல் வளரும் வர்ஷாவின் நிலையையும் கலா புரிந்துகொள்கிறாள். அந்தப் புரிதல் மணியின் மேல் காதலாக மாறுகிறது. அவனைத் திருமணம் செய்ய விரும்புவதாக வெளிப்படையாகச் சொல்கிறாள். மணியிடம் எந்தப் பதிலும் இல்லை என்றாலும் மனத்தில் பிரியம் உண்டு.

**காதலைத் தியாகம் செய்கிறான் மணி, கூடவே கலையையும்.**

ஒரு நாள் மிகப் பெரிய கொம்பின் முனையில் வர்ஷாவை வைத்து உயரே தூக்கி பயிற்சி கொடுக்கிறான் மணி. ஏதோ ஒரு கணத்தில் கலாவின் முகம் அவன் மனத்தில் நிழலாடுகிறது. அந்த மயக்கத்தில் கொம்பை விட்டுவிட, வர்ஷா உயரே இருந்து கீழே விழுந்து விடுகிறாள். தலையில் பலமான அடி. பேச்சு மூச்சில்

# கழைக்கூத்தாடியின் காதல்!



லாமல் கிடக்கிறாள். அவளைத் தூக்கிக் கொண்டு மருத்துவமனைக்கு ஓடுகிறான். மருத்துவமனையில், 'வர்ஷாவுக்கு ஸ்கேன் எடுக்கவேண்டும், எழுநூறு ரூபாய் பணம் கொண்டுவா' என்கிறார்கள். சைக்கிளை எடுத்துக் கொண்டு தெருத் தெருவாக வித்தை காட்டுகிறான் மணி. அதிலும் ஆயிரம் பிரச்னைகள். முழுப் பணத்தையும் சேர்க்க முடியவில்லை.

மருத்துவமனைக்குத் திரும்பும் மணி, குழந்தை வர்ஷா உயிர்பிழைத்ததை அறிந்து நிம்மதியாகிறான். உதவிய டாக்டருக்கு நன்றி சொல்கிறான். அவர், 'படிக்க வேண்டிய வயதில் வர்ஷாவை இப்படி கழைக் கூத்தாடச் செய்வது சரியல்ல' என்று அறிவுரை சொல்கிறார். என்றைக்கோ ஒரு நாள் 'என்னை வந்து பார்!' என்று சொன்ன ஒரு பெரியவரின் முகம் அப்போது மணியின் நினைவுக்கு வருகிறது. அவரைத் தேடிப் போகிறான். அவர் ஒரு பள்ளியில் வாட்ச்மேன். அவரின் உதவியால் மணிக்கு வாட்ச்மேன் வேலை கிடைக்கிறது. அங்கேயே வர்ஷா படிக்கலாம் என்கிறார் பள்ளித் தாளாளர். வர்ஷாவுக்காகக் கலாவின் காதலையும், கலையையும் தியாகம் செய்கிறான் மணி.

இந்தக் கதையை ஒரு மணி நேரக் குறும்படமாக எடுத்திருக்கிறார் சுப்பராஜ். மணியாக அவரே நடித்தும் இருக்கிறார். நாகர்கோவிலைச் சேர்ந்த இவர் ஒரு டி.எஃப்.டி ஸ்டுடண்ட். தற்போது ஒரு படத்தில் உதவி இயக்குநராகப் பணியாற்றி வருகிறார். இந்தக் கதைக்காக சைக்கிளில் வித்தை செய்யவும், சிலம்பாட்டம் கற்றுக் கொள்ளவும் நிறைய மெனக்கிட்டிருக்கிறார். சென்னையில் நடந்த ஒரு குறும்பட விழாவில் முதல் பரிசைத் தட்டிச் சென்றிருக்கிறது 'செடி'.

''என்ன கிடைச்சு, என்ன ஸார்! இன்னும் இந்த ஷார்ட் ஃபிலிமுக்காக வாங்கின கடன் அடையல!'' என்கிறார் சுப்பராஜ்.

**- பாலு சத்யா**

விடுதலைப் புலிகளின் தலைவர் பிரபாகரன் இறந்த பிறகு, ''நாடு கடந்த தமிழீழத்தை அமைப்போம்'' என்று அறிக்கைவிட்டு அனைவரையும் தம்மை நோக்கித் திரும்பிப் பார்க்க வைத்தார் குமரன் பத்மநாபன்; சுருக்கமாக கே.பி. சமீபத்தில் அவரையும் இலங்கை அரசு அதிரடியாகக் கைது செய்திருப்பதில் ஆட்டம் கண்டிருக்கிறது புலிகள் அமைப்பு!



பிரபாகரன், பாலசிங்கத்துடன் கே.பி.

யார் இந்த கே.பி.? விடுதலைப் புலிகளுக்குத் தேவையான ஆயுதங்கள், வெடிகுண்டுகள், தகவல் தொடர்பு சாதனங்களை... உலகின் பல்வேறு நாடுகளிலிருந்து வாங்கி, ஸ்ரீலங்காவுக்கு ரகசியமாகக் கொண்டுவரும் பொறுப்பாளி. ஸ்ரீலங்காவின் காங்கேசன்துறையைச் சேர்ந்தவர். யாழ் பல்கலைக்கழகத்தில் படித்தபோது அதிபுத்திசாலி என்று பெயரெடுத்தவர். விடுதலைப் புலிகள் தலைவர் பிரபாகரனின் மரணத்தை உறுதிசெய்து பி.பி.சி.க்குப் பேட்டி அளித்தவர். பிரபாகரனுக்குப் பின் புலிகள் இயக்கத்துக்குத் தலைவராகி, தலைமறைவாகவே இருந்து வந்தார். இந்நிலையில்தான் அதிரடியாக இவரைக் கைது செய்திருக்கிறது இலங்கை அரசு.

பிரபாகரனின் ஆணைப்படி உலகம் முழுவதும் பயணம் செய்து, ஆங்காங்கே சரக்குக் கப்பல் போக்குவரத்து கம்பெனிகளை ஆரம்பித்தார் கே.பி. இதில் இரண்டு லாபங்கள். சரக்குப் போக்குவரத்து என்றால் சந்தேகம் வராது; பணமும் சம்பாதிக்கலாம். உலகளாவிய பயணங்களின்போது விடுதலைப் புலிகளுக்காக வாங்கப்படும் ஆயுதங்கள், தகவல் தொடர்பு சாதனங்கள், ராணுவத் தளவாடங்களை ரகசியமாக ஸ்ரீலங்காவுக்குக் கொண்டுவந்துவிட முடியும்.

அப்படித் தொடங்கப்பட்ட கப்பல் கம்பெனிகளுள், 'அரசு மேரிடைம்

---

**லெபனானில் கே.பி.யால் வாங்கப்பட்ட ஏ.கே.47 துப்பாக்கியைத்தான் 'ராஜீவ்காந்தி கொலை வழக்கு சிவராசன்' பயன்படுத்திக் கொண்டிருந்தான் என்பதை சிறப்புப் புலனாய்வுப் படை கண்டுபிடித்தது.**

---



# யார் இந்த கே.பி.?

கம்பெனி', கேப்டன் டேவிட் அண்ட் அசோஸியேட்ஸ், பிளைமௌத் மேரிடைம் (பி)லிமிடெட், பாயிண்ட் பெட்ரோ ஷிப்பிங் கம்பெனி, விக்ரம் ஹோல்டிங்ஸ் ஆகியவை ஒரு சில. அடுத்த கட்டமாக, சிங்கப்பூர் தமிழர்களின் உதவியுடன் 'சன் ஹிங்' என்ற பெயர் கொண்ட ஒரு பழைய சீனக் கப்பலை வாங்கி அதற்கு 'எம்.வி. சோழன்' என்று பெயர் சூட்டினார்கள். அடுத்தடுத்து வாங்கப்பட்ட கப்பல்கள் கடற்குதிரை, தொடுவானம், சூரியப் பறவை, தங்கப்பறவை, அலிதொஷிங், டோங் நோவா, யஹதா, அமேஸான்... என்ற பெயர்களில் கடலோட ஆரம்பித்தன. இதற்கு மூளையாகச் செயல்பட்டவர் இந்த கே.பி.தான்.

புலம்பெயர்ந்து, உலகமெங்கும் பரவிக் கிடக்கும் லட்சக்கணக்கான ஈழத் தமிழர்கள், புலி அனுதாபிகளைச் சந்தித்து புலிகள் இயக்கத்துக்காக நிதி திரட்டிய கே.பிக்கு சிங்கப்பூர், பாரீஸ், ஆம்ஸ்டர்டாம், ஃபிரான்க்ஃபர்ட் என்று உலகின் பல முக்கிய நகரங்களிலும், இந்தியாவில் சென்னை மற்றும் மும்பையிலும் உள்ள சர்வதேச வங்கிகளிலும் கணக்குகள் உள்ளன. புலிகள் அமைப்புக்கு ஆயுதங்களோடு சேர்த்து, தகவல் தொடர்பு சாதனங்கள் முதல் சீருடைத் துணிகள் வரை வாங்கி அனுப்பிக் கொண்டிருந்தார்.

செக்கோஸ்லோவேகியாவில் தயாரிக்கப்பட்டு, லெபனானில் கே.பி.யால் வாங்கப்பட்ட ஏ.கே.47 துப்பாக்கியைத்தான் 'ராஜீவ்காந்தி கொலை வழக்கு சிவராசன்' பயன்படுத்திக் கொண்டிருந்தான் என்பதை சிறப்புப் புலனாய்வுப் படை கண்டுபிடித்தது. ராஜீவ் படுகொலை குறித்த சதித்திட்டம் முன்னதாகவே கே.பி.க்குத் தெரியும். என்றாலும் இதனை நிரூபிக்கப் போதிய ஆதாரங்கள் இல்லாததால், கே.பி மீது. சி.பி.ஐ. குற்றப்பத்திரிகை தாக்கல் செய்யவில்லை. ஆனாலும், கே.பி.யைக் கைது செய்தால் புதிய விவரங்கள் தெரியக் கூடும் என்று கருதியது. அந்தச் சமயம் கே.பி. கோலாலம்பூரில் வசிப்பதாகத் தெரிந்ததால், 2001ஆம் ஆண்டு, மலேசிய அரசுக்கு கே.பி.யைக் கைது செய்ய ஒத்துழைப்பு கோரி வேண்டுகோள் அனுப்பி

* கே.பி.(தற்போதைய படம்)



# கே.பி.யிடம் இருபது பாஸ்போர்ட்கள் இருக்கின்றனவாம். இதில் இரண்டு இந்திய பாஸ்போர்ட்டுகள்!


* கே.பி. (பழைய படம்)

யது. தவிர, இன்டர்போல் வழியாக 'இந்தியாவின் மோஸ்ட் வான்டட்' என்றும் அறிவித்தது.

சிறப்புப் புலனாய்வுக் குழு, கே.பி.யின் தலைமையில் இயங்கி வந்த ஆயுத பர்சேஸ் தொடர்புள்ள ஏராளமான ஃபைல்களைக் கைப்பற்றியது. கே.பி.க்கும், அகில உலக அளவில் இயங்கி வரும் ஆயுத சாம்ராஜ்ய சக்கரவர்த்திகளுக்கு நெருக்கமாக இருந்த சந்திரா சுவாமிக்கும் நெருங்கிய தொடர்பு உண்டு. சந்திரா சுவாமிக்கு நெருக்கமான 'பப்லு ஸ்ரீவத்சவா' சி.பி.ஐ.க்கு அளித்த வாக்குமூலத்தில், கே.பி.யைப் பற்றி நிறைய தகவல்களைச் சொல்லியிருக்கிறார். கே.பி.யிடம் சுமார் இருபது பாஸ்போர்ட்கள் இருப்பதாக சி.பி.ஐ. கூறுகிறது. அவற்றில் இரண்டு இந்திய பாஸ்போர்ட்கள் (பாஸ்போர்ட் எண்: E 277582 மற்றும் E 432431)! தற்போதும் கே.பி. மீது இந்தியாவில் வழக்குகள் நிலுவையில் உள்ளதால், அவரை விசாரணை செய்யவேண்டும் என இந்திய சி.பி.ஐ., ஸ்ரீலங்கா அரசிடம் கேட்டுள்ளது.

**கே.பி**. மீது தமிழ்நாட்டிலும் ஒரு வழக்கு இருக்கிறது. 1991ல் புலிகளுக்காக ஆயுதங்கள் கொண்டுவந்த 'டோங் நோவா' கப்பலை இந்தியக் கடற்பகுதியில், நம் நாட்டுக் கடற்படை வழிமறித்த போது, கப்பலிலிருந்த பத்து பேரை தமிழக போலீஸ் கைது செய்து விசாரணை நடத்தியது. இந்த வழக்கில் கே.பி.யின் பெயரும் சேர்க்கப்பட்டுள்ளது.

**கே.பி.**, ஒரே இடத்தில் வெகு நாட்கள் தங்குவதில்லை என்பதால் இன்டர்போல் உதவியுடன்கூட இதுவரை அவரைப் பிடிக்க முடியவில்லை. இப்போதுகூட, ஸ்ரீலங்கா அரசு எடுத்த மிகவும் அதிரடியான நடவடிக்கை காரணமாகப் பிடிபட்டிருக்கிறார். பேங்காக் நகருக்கு வெளியே ரகசியமான இடத்தில் வசித்து வந்த கே.பி., ஆகஸ்ட் 5ஆம் தேதி பிற்பகல் இரண்டு மணிக்கு அப்துல் ரஹ்மான் ரோட்டில் உள்ள ஃபார்ஸ்ட் டியூன் ஹோட்டலில் லண்டனிலிருந்து வந்திருந்த புலிகள் இயக்கப் பிரமுகர்கள் இருவரை சந்தித்துப் பேசிக்கொண்டிருந்தார். அப்போது அவருக்கு மொபைலில் ஒரு கால் வந்தது. ஃபோனில் பேசிக்கொண்டே ஹோட்டல் அறையிலிருந்து வெளியில் வந்த கே.பி., அப்புறம் என்ன ஆனார் என்பது யாருக்கும் தெரியவில்லை. மறுநாள் அந்தப் புதிருக்கு ஸ்ரீலங்கா ராணுவத் தரப்பிலிருந்து விடை கிடைத்தது. கே.பி. ஸ்ரீலங்கா ராணுவத்தால் கைது செய்யப்பட்டு, தனி விமானம் மூலம் ஸ்ரீலங்காவுக்குக் கொண்டு செல்லப்பட்டு, ரகசியமான இடத்தில் ராணுவத்தால் விசாரிக்கப்படுகிறார். இந்த அதிரடி கைது நடவடிக்கையால் புலிகள் குறித்த, கூடுதல் பூதாகரங்கள் வெளிவரலாம்.

**– எஸ்.சந்திரமௌலி**

# நூல் அறிமுகம்







## மனதைத் தொடும் வரிகள்




'விட்டுக் கொடுப்பானா/ மனிதன்/காளையை அடக்கி/ நிரூபித்து விடுகிறான்/ நான்தான்/ மிருகமென' என்று சொல்லி 'சுளீர்' என நம் மனத்தில் வரிகளைத் தைக்கிறார் **மகரந்தன்,** தமது **பிறை வளரும் ஓசை** கவிதைத் தொகுப்பில்.

ஒவ்வொரு கவிதையிலும் கவிஞரின் வித்தியாசமான பார்வை 'அட' என வியக்க வைக்கிறது. இந்நூலை வெளியிட்டுள்ள **மார்கழி பதிப்பகம், ஆர்.56/11, கோட்டூர்புரம், சென்னை - 85** க்கு ஒரு சபாஷ் சொல்லலாம். புத்தகத்தின் **விலை ரூ. 40.00**

**எ**த்தனையோ அற்புத நூல்களை வெளியிட்டுள்ள **திருவரசு புத்தக நிலையம், 23, தீனதயாளு தெரு, தி.நகர், சென்னை-17** கொடுத்துள்ள மற்றொரு நூல், **திருவண்ணாமலையின் திருவருள்.** 'இந்த அவசர யுகத்தில் கடவுளைத் தரிசிப்பதில் கூட அவசரம். அவரைக் காட்சிப் பொருளாக்கி சிறப்புக் கட்டணம் மூலம் பார்க்கிறோம்' என்று தமது முன்னுரையில் வேதனை யுடன் குறிப்பிடுகிறார் நூலாசிரியர் **புலவர் எம்.எஸ்.சுப்பிரமணியம்.** கிரிவல மகிமையையும், தல வரலாற்றையும் அவசரமின்றி அற்புதமாய் விளக்குகிறது நூல். **விலை ரூ.50.00**

**ம**ண்ணில் நல்ல வண்ணம் வாழலாம்... வாருங்கள் என அழைத்து வழிகாட்டுகிறார் **தமிழருவி மணியன்.** வாழ்க்கை குறித்த சரியான புரிதல் இல்லாமல் வசதி, வாய்ப்புகள் இருந்தும் மனத்தில் நிம்மதி இல்லாமல் தவிக்கும் மனிதர்கள் ஏராளம். எப்படி நடந்தால் நாமும் மகிழ்ந்து, சுற்றி உள்ளவர்களையும் மகிழ்விக்கலாம் என்பதை அற்புதமாக விளக்குகிறார்.

**விகடன் பிரசுரம், 757, அண்ணா சாலை, சென்னை-2.** வெளியிட்டுள்ள இந்நூலின் **விலை ரூ.65.00**

**- ராஜ்**

அருண் சரண்யா



# பார்வை பறிபோகுமா பரந்தாமா?

ஒவ்வொருநாளும் மிகவும் விடியற்காலையில் எழுந்து கொள்ளும் ஜனாபாய், கோதுமை மாவை இயந்திரத்தில் அரைப்பது வழக்கம். ஆனால், அன்று அதற்குரிய நேரம் வந்தும் உறங்கிக்கொண்டிருந்தாள். காரணம் அசதிதான். தன்னோடு விட்டலனும் தன் உணவை உண்டான் என்ற பூரிப்பில் அளவு கடந்த பெருமையால் விளைந்த களைப்பு!

ஒரு வழியாக எழுந்த ஜனாபாய் நேரமானதை எண்ணிப் பதறினாள்.



இயந்திரத்தின் அருகில் சென்ற போது அதனருகில் ஏற்கெனவே அமர்ந்திருந்தான் விட்டலன். ''ஜனாபாய், நீ பாட்டுப் பாடு. இன்று நான் மாவு அரைக்கிறேன்'' என்றான். முதலில் மறுத்து, பிறகு ஒத்துக்கொண்டாள்.

மாவரைத்து முடித்ததும் சிறிதுநேரம் படுத்துக் கொள்ளலாம் என்று முயற்சிக்க, ஜனாபாய்க்கு வேறொரு பொதுநல எண்ணம் தோன்றியது. ''விட்டலா, பக்தர்கள் உன்னைத் தரிசிக்க உன் ஆலயத்துக்கு வரத் தொடங்கியிருப்பார்கள். எனவே, நீ அங்கு செல்வதுதான் முறை'' என்றாள்.

''நல்லவேளை நினைவுபடுத்தினாய்'' என்றான் விட்டலன். பிறகு மறக்காமல் ஒன்றை மறந்துவிட்டுப் போனான். அது அவனுடைய பீதாம்பரம். விட்டலனின் சன்னிதிக்குள் நுழைந்த அர்ச்சகர்கள் திகைத்தனர். இதென்ன, பாண்டுரங்கனின் பீதாம்பரம் எங்கே மறைந்தது? போதாக்குறைக்கு கந்தல் உடை எதற்கு?

இந்தச் சந்தேகங்கள் எழுந்தபோதே அவற்றுக்கான விடைகளையும் அவர்களால் யூகிக்க முடிந்தது. 'யாரோ ஒரு பெண்மணி விட்டலனிடம் பெரும்பக்தி கொண்டிருக்க வேண்டும். அதனாலே இந்த ஆடை விளையாட்டு.'

ஆனால், வேறொரு விஷயத்தில் அவர்களுக்குச் சமாதானம் ஏற்படவில்லை. விட்டலனுக்கு அணிவித்திருந்த நகைகளையும் காணோம். அர்ச்சகர்கள் மனத்தில் கோபம் எழுந்தது. 'கண்ணனுக்கு இதுவே வேலையாகி விட்டது. பாண்டுரங்கன் ஆலயத்துக்கு உரிய நகைகளை எப்படி வேறொரு பெண்மணி பெற்றுக் கொள்ளலாம்? 'எனக்கு வேண்டாம் விட்டலா' என்று மறுத்திருக்க வேண்டாமா? உடனே அந்தப் பெண்மணியை விசாரித்து நகைகளை மீட்க வேண்டும்.'

நாமதேவரை விசாரித்தபோது, ஜனாபாய் குறித்து அவர் உயர்வாகக் கூற, நாமதேவர் அறியாமல் அவரது வீட்டை

அடைந்தனர் அர்ச்சகர்கள். அங்கிருந்த ஜனாபாய் மரியாதையுடன் அவர்களை வரவேற்றாள்.

''ஜனாபாய், உன் பக்தியை எங்களால் உணர முடிகிறது. என்றாலும் பீதாம்பரத்தையும் நகைகளையும் விட்டலனுக்கு அணிவித்து அழகு பார்ப்பதுதானே சிறப்பு?'' என்றனர் அர்ச்சகர்கள்.

அவர்கள் கூறியதன் பின்னணியை உணர்ந்துகொள்ளாமல், ''அதிலென்ன சந்தேகம்? பீதாம்பரமும் நகைகளுமாகக் காட்சியளிக்கும் விட்டலனைக் கண்டால் மேலும் அதிகமான மகிழ்ச்சி பொங்குமே'' என்றாள் ஜனாபாய்.

''அப்படியானால் விட்டலனிடமிருந்து நீ பெற்றுக்கொண்ட பீதாம்பரத்தையும் நகைகளையும் கொடுத்துவிடு.''

''பீதாம்பரத்தைத் துவைத்துப் போட்டிருக்கிறேன். ஆனால் நகைகள் எதுவும் என்னிடம் இல்லையே'' என்றபடி, தான் விட்டலனின் ஆடையை உலர வைத்த இடத்துக்குச் சென்றாள். அங்கு அந்த ஆடை இல்லை. ''என்ன ஆச்சரியம், விட்டலனின் உடையைக் காணோமே'' என்று ஜனாபாய் கூற, அர்ச்சகர்கள் அவளை நம்பவில்லை. ஜனாபாயின் வீட்டைச் சோதனை செய்தார்கள். அங்கே ஒரு மூலையில் காணப்பட்டது விட்டலனின் பீதாம்பரம். அதற்குள் பத்திரமாக இருந்தன விட்டலனுக்கு அணிவிக்கப்பட்ட விலை உயர்ந்த நகைகள்!

'இவள் அடிப்படையில் பக்தையே அல்ல. விட்டலனின்

**ஜனாபாய் கண்களைக் குத்தக் காத்திருந்த சூலம், எரிந்து சாம்பலானது!**



**அபங்க அமுதம்**

பஜன கரீ மஹாதேவ
ராம பூஜி ஸதாசிவ
தோகே தேவ ஏக பாஹீ
சிவா ராமா நாஹீ பேத
ஐஸே தேவ தேஹீ ஸித்த
ஜனீ ம்ஹணே ஆத்மா ஏக
ஸர்வ கட தோ வ்யாபக

- ஜனாபாய்

'சிவபெருமான் ராமநாம பஜனை செய்கிறார். ராமரோ சிவபெருமானைப் பூஜை செய்கிறார். இரண்டு தெய்வங்களையும் ஒன்றாகவே கருதுங்கள். அவர்கள் ஒருவரே, இருவரல்ல. தங்களுக்குள் எந்தவித பேதமும் இல்லை என்பதை அவர்களே நமக்கு எடுத்துக் காட்டியுள்ளனர். ஒன்றேயான ஆத்மாவே அனைத்திலும் வியாபித்துள்ளது.'



"ஜனாபாய், நீ பாட்டுப் பாடு நான் மாவு அரைக்கிறேன்!" - விட்டலன்

நகைகளைத் திருடியவள். இவளுக்குத் தகுந்த தண்டனை அளிக்க வேண்டும்' என்று முடிவெடுத்தனர் அர்ச்சகர்கள்.

அவர்கள் பேசுவதைக் கேட்ட ஜனாபாய், ''நான் ஏதும் அறியாதவள். இந்த நகைகளை நான் திருடி இருந்தால் என் பார்வை பறிபோகட்டும்'' என்றாள் குமுறலுடன்.

''உன் குற்றத்துக்கு நாங்களே அந்த தண்டனையைத்தான் தருவதாக இருக்கிறோம். ஊர் எல்லையில் பதிக்கப்பட்டுள்ள சூலத்தினால் உன் கண்களைக் குருடாக்குவதுதான் உனக்கேற்ற தண்டனை'' என்றனர் அர்ச்சகர்கள்.

ஜனாபாய் அங்கு அழைத்துச் செல்லப்பட்டாள். அங்கிருந்த இரும்புச் சூலத்தின் நுனிகள் கூர்மையுடன் காத்திருந்தன. மனம் தளர்வடையாமல் விட்டல நாமத்தை ஜெபித்தாள் ஜனாபாய். புறக் கண்களைப் பறிகொடுத்தாலும் மனக் கண்ணில் அவளுக்குத் தோன்றும் விட்டல தரிசனத்தை யாரால் தடுத்துவிட முடியும்?

ஆனால், அர்ச்சகர்களுக்கு அதிர்ச்சி காத்திருந்தது. அவர்கள் கண்ணெதிரே அந்தச் சூலம் எரிந்து சாம்பலானது. வந்திருந்த மக்களெல்லாம் ஜனாபாயை விழுந்து வணங்கினர். விட்டலனின் திருவிளையாடல்களை வியந்து பேசியவாறே கலைந்து சென்றனர்.

நாளடைவில் விட்டலன் அடிக்கடி ஜனாபாய்க்குக் காட்சி தந்தான். ஞானேஸ்வரர், நாமதேவர், ஜனாபாய் ஆகியோருக்கு கூட்டாகவே விட்டலனுடன் பேசிப் பழகிக் களிப்புறும் வாய்ப்புகள் கிட்டின. நாமதேவரால்தான் - அவர் வீட்டில் தங்கியதால்தான் - விட்டல தரிசனம் தமக்குச் சாத்தியமாயிற்று என நம்பிய ஜனாபாய், தம் அபங்கங்களில் 'நாமதேவரின் ஜனாபாய்' என்றே தம்மைக் குறிப்பிட்டுக்கொண்டார்.

வண்ணப்படம் : வேதா

படங்கள் : ஸ்ரீஹரி




ஏ.கே.வெங்கடசுப்ரமணியம்

# அம்பை நோகும் அபத்தம்!

"**மி**ன்னணு வாக்கு இயந்திரத்தில் 'கோல்மால்' செய்ய முடியும் என்பதை நிரூபித்துக் காட்டுங்கள்" என்று சவால் விட்டது தேர்தல் கமிஷன். அந்தச் சவாலை ஏற்க யாரும் தயாரில்லை. இருப்பினும் சில கட்சிகள் தொடர்ந்து, "இயந்திரத்தில் கோல்மால் செய்ய முடியும்" என்று பிரசாரம் செய்வதிலிருந்து ஓயவில்லை. இதுகுறித்து வாக்காளர்களிடம் விழிப்புணர்வை ஏற்படுத்தும் 'உந்துனர் அறக்கட்டளை' நிறுவனரும் ஓய்வுபெற்ற ஐ.ஏ.எஸ். அதிகாரியுமான ஏ.கே.வெங்கடசுப்ரமணியத்திடம் பேசினோம்...

**ஓயாதா இந்தப் பிரச்னை?**

"1999-ல் பா.ஜ.க.வும் 2001ல் ஜெயலலிதாவும் தேர்தலில் வெற்றி பெற்றார்கள். அதேபோல பா.ம.க. 1998 முதல் கூட்டணி காரணமாகத் தொடர்ந்து வெற்றி பெற்று வந்தது. இவர்கள் வெற்றி பெறும்போதெல்லாம் மின்னணு வாக்கு இயந்திரத்தைப் பற்றி எந்தக் குறையும் சொல்லவில்லை. அத்வானி போன்ற தலைவர்களே இப்படிச் சொல்வது வருத்தமளிக்கிறது."

**'கோல்மால்' செய்ய முடியுமா? முடியாதா?**

"நமது நாட்டில் மின்னணு வாக்கு இயந்திரங்கள் 'பாரத் எலக்ட்ரானிக்ஸ்' மற்றும் 'எலக்ட்ரானிக்ஸ் கார்ப்பரேஷன் ஆஃப் இந்தியா' ஆகிய நிறுவனங்களால் தயாரிக்கப்படுகின்றன. தனிப்பட்டவர்கள் 'கோல்மால்' செய்ய முடியும் என செயல் விளக்கம் செய்து காட்டியது; அவர்களே தயாரித்த இயந்திரங்களில்தான். ஆனால், தேர்தல் கமிஷன் மேற்கண்ட நிறுவனங்கள் தயாரித்த நூறு இயந்திரங்களைத் தயாராக வைத்துக்கொண்டு புகார் சொன்னவர்களை அழைத்தது. இது தொடர்பாக சுப்ரீம் கோர்ட்டில் வழக்கு போட்ட 'சதீஷ் சந்த்ரா' என்பவர் கோல்மால் செய்யமுடியும் என்பதை நிரூபிக்கமுடியாமல் பின்வாங்கி விட்டார். தேர்தல் கமிஷன் நடைமுறை என்பது ஒரு கூட்டு முயற்சி. அதில் தனிப்பட்ட நபர்களோ, கட்சியோ, அதிகாரிகளோ கோல்மால் செய்துவிட முடியாது."

**வாக்குச்சீட்டு வரவேற்கத்தக்கதா?**

"வாக்குச் சீட்டுகளைப் பயன்படுத்திய இரண்டு உள்ளாட்சித் தேர்தல்களில் 'கோல்மால்' நடந்ததை நான் நேரில் பார்த்திருக்கிறேன். எனவே மின்னணு இயந்திரத்தைத்தான் பயன்படுத்த வேண்டுமென உயர்நீதிமன்றத்தில் வழக்குப் போட்டிருக்கிறேன். தேர்தலில், வாக்காளர் தேர்தல் கமிஷன், கட்சிகள்... இவை மூன்றும் முக்கியம். இதில் வாக்காளர்களும் தேர்தல் கமிஷனும்; தேர்தல் நியாயமாக நடக்க வேண்டுமென்றே விரும்புகிறார்கள். ஆனால் வாக்குப் பதிவின்போது மின்னணு இயந்திரம் மற்றும் வாக்குச் சீட்டிலும், பின்னர் வாக்குச் சீட்டின் எண்ணிக்கையின் போதும் கோல்மால் செய்வது கட்சிகளே. அவர்கள் யோக்கியமாக இருந்தால் தேர்தல் நியாயமாக நடக்கும். எய்தவன் இருக்க அம்பை நோவது போல்தான் இந்தப் புகார்கள்!"

– ஸ்ரீநி

## ஸ்வானுபவா - 2009



ஸ்வானுபவா நிர்வாகக் குழு

# இசையின் கெலைடோஸ்கோப்!

மனம்வார்த்த கற்பனையை ஆண்டவன் கட்டளையாக ஏற்று விரல்கள் வண்டின் சிறகு போல் விர்ரிட்டன! திருவாளப்புத்தூர் கலியமூர்த்தியும் திருப்புங்கூர் முத்துக்குமாரசாமியும் மாறி மாறி தவிலில் புரிந்த இந்திர ஜாலம் ஓராயிரம் ரசிகர்களைக் கட்டிப் போட்டது! அந்த ரசிகர்களுள் தொண்ணூற்று ஒன்பது சதவிகிதத்தினர், அந்த வாசிப்பின் இளமைத் துள்ளலைப் பிரதிபலித்த இளைஞர்கள்! மீதி ஒரு சதவிகிதத்தினருள் காணப்பட்ட முன்னணி கர்நாடக சங்கீத வித்வான்கள், மாறாத பிரமிப்பும் களிப்பும் ததும்பிய முகங்களுடன் தாளம் போட்டு, தலையாட்டி மகிழ்ந்தனர். இசை மாணவர்களான இளைஞர்களுக்கோ, ஷேக் மெஹ்பூப் சுபானி - கல்லா-பி- மெஹ்பூப் ஜோடியின் அந்த நாதஸ்வரக் கச்சேரி டபுள் ட்ரீட். உன்னதமான நாதஸ்வரக் கலையை நெருக்கத்தில் அனுபவிப்பது ஒரு பக்கம்; ரசனையில் தேர்ந்த சீனியர் வித்வான்கள் அந்தக் கலையின் நயங்களை எப்படி உள்வாங்குகிறார்கள் என்று கவனிக்கும் வாய்ப்பு இன்னொரு பக்கம்!


ஸ்வானுபவாவுக்காக கல்கி தயாரித்த சிறப்புக் கையேட்டை வாசிக்கிறார் புரிசை கண்ணப்ப தம்பிரான் குழுவைச் சேர்ந்த கூத்துக் கலைஞர்

ஸ்வானுபவா என்ற ஆறு நாள் இளைஞர் இசைத் திருவிழாவில் பங்கேற்றுப் பயனடைந்த சுமார் ஆயிரம் இசை மாணவர்களுக்கு ஆற்றொழுக்காக இந்த டபுள் ட்ரீட் தொடர்ந்து கிடைத்தது. அதுவும் பைசா செலவில்லாமல்; அதுவும் முழு நாள் அனுபவமாக; அதுவும் மதிய உணவுடன் (உபயம்: ஸ்ரீகிருஷ்ணா ஸ்வீட்ஸ்); அதுவும் மிக ரம்மியமான சூழலில்! - சென்னை கலாக்ஷேத்திராவின் 'கூத்தம்பலம்' அரங்கில் ஆரம்பித்த நிகழ்வுகள் இரண்டு நாள் சென்று அடையாறு அரசு இசைக் கல்லூரியின் மரத்தடி பந்தலுக்கு முகாம் மாறியது. கடைசி இரண்டு நாட்களும் பெருமைக்குரிய மியூஸிக் அகாடமியின் ஏ.ஸி. சௌகரியத்தில் நிகழ்ச்சிகள் நடந்து முடிந்தன.

கலாக்ஷேத்ராவில் கட்டெறும்புகளின் களீர் கடிகளையும், இசைக் கல்லூரியில் சிற்றெறும்புகளின் பளீர் பிடுங்



* கல்கி தயாரித்த கையேடு

கல்களையும் யாரும் பொருட்படுத்தியதாகத் தெரியவில்லை. ஜெய கணேஷ் தாள வித்யால யாவின் ஜூனியர் கலை ஞர்கள் சொடுக்குப் போட்டாற்போல் மாற்றி மாற்றி வாசிக்க வாசிக்க, நம் மாணவச் சிங்கங்கள் வெடுக்வெடுக்கென்று லயத்தைப் புரிந்துகொண்டு கூடவே தாளம் போட்டார்கள்.

ஸீனியர் வித்வான்களிடம் பயப்படாமல் கேள்வி கேட்டார்கள் - ''உங்கள் கம்பீரக் குரலின் ரகசியம் என்ன?'' என்று தொண்ணூறை நெருங்கும் ஆர்.கே.ஸ்ரீகண்டனிடம் ஒரு மாணவர் கேட்க, அவர் பதிலாக அளித்த 'ஹெல்த் அண்ட் மியூஸிக்' என்ற மினி லெக்சரைப் பொறுமையாகக் கேட்டு உள்வாங்கிக் கொண்டார்கள்!

ஆந்திர தேவதாஸி நடனத்துக்குப் புத்துயிர் ஊட்டிய நாட்டியக் கலைஞர் ஸ்வப்ன சுந்தரி, 'விலாஸினி நாட்டியம்' என்ற நிகழ்ச்சியாக அதை வழங்கிய போது, ''அவர் தமது முயற்சிகளில் சந்தித்த எதிர்ப்புகள் என்ன? அப்போது


நெருக்கத்தில் அனுபவித்த...



...டபுள் ட்ரீட்

எப்படி உணர்ந்தார்?'' என்று முதிர்ச்சியோடும் பொறுப்புணர்வோடும் கேள்வி எழுப்பினார்கள்.

அருணா சாய்ராம், நித்யஸ்ரீ, சுதா ரகுநாதன்... போன்றோர் நிகழ்ச்சிகளுக்குப் பிறகு ஆட்டோகிராஃப் வேட்டை அமோகம்! ஸ்வானுபவாவை வடிவமைத்த பாம்பே ஜெயஸ்ரீ, டி.எம். கிருஷ்ணாவோ கைவலிக்க ஆட்டோகிராஃப் போட்டதுடன், மாணவர்களோடு ஃபோட்டோகிராஃபுக்கும் போஸ் கொடுத்து திருப்திப்படுத்த வேண்டியிருந்தது.

இலேசில் அகப்படாத படுபிஸி கலைஞர்கள் முதல், குடத்தில் விளக்காக ஒளிர்ந்து கொண்டிருக்கும் அரிய ஆர்டிஸ்ட்கள் வரையில் சுமார் 240 கலைஞர்கள் பங்கேற்ற ஓர் இசைத் திருவிழாவாக ஸ்வானுபவா 2009 வடிவமைக்கப்பட்டிருந்தது. தெருக்கூத்து, நாட்டியம், நாதஸ்வரம், குரலிசை, சொற்பொழிவு, நேர்காணல், உரையாடல் என்று பல வடிவங்களில் பரவலாயின அனுபவங்கள். கெலைடோஸ்கோப்பைத் திருப்பித் திருப்பி, ஒருசில கண்ணாடித் துளிகளிலேயே கணக்கற்ற வண்ணச் சித்திரங்களை

ரசிப்பது போல, நிகழ்ச்சிக்கு நிகழ்ச்சி நகர நகர, இளம் ரசிகர்கள் கர்நாடக சங்கீதத்தைப் பல்வேறு கோணங்களில் அனுபவித்துக் களித்தார்கள்; கற்றுக் கொண்டார்கள்.

ஆறு நாட்களிலும் சராசரியாக ஆறு நிகழ்ச்சிகள், தொடர்ச்சியாக அவற்றுக்கான ஏற்பாடுகள், மாணவர்களின் தேவைகளைக் கவனித்தல், ஒழுங்கு - கட்டுப்பாடு, நேரம் தவறாமை, குறிப்பாக அனிச்ச மலர் கலைஞர்களை அலுங்காமல், நலுங்காமல் தாங்கிப் பிடித்தல், ஆறு நாள் திருவிழாவுக்கு ஆறு வாரங்கள் முன்பிருந்தே ஏற்பாடுகளைக் கவனித்தல் - என்று ஸ்வானுபவா பணிகளை இழுத்துப் போட்டுக் கொண்டு ஓடியாடிய இளைஞர் குழு இதோ:

ரித்விக் ராஜா, எதிராஜன், ரம்யா கண்ணன், தாரிணி கல்யாணராமன், சந்திரசேகர ஷர்மா, அனிருத் ஆத்ரேயா, ஹரிணி ராமகிருஷ்ணன், கிர்த்திகா அரவிந்த், பூர்ணிமா, செய்த்ரா சாய்ராம், கிர்த்தனா. வி,


• 'ஸரிகமப பாப்பா' வழங்கிய சுந்தரேசன்

# துக்கடா டைம் வித் கல்கி


• டி.கே.பிக்கு அஞ்சலி

ஒவ்வொரு நாளும் பிற்பகல் கல்கி வழங்கிய 'துக்கடா டைம்'இல் வி.ஐ.பிக்கள் பங்கேற்றுச் சிறப்பித்தனர். கல்கி வார இதழ் பக்கங்களில் இடம்பெற்ற இசை தொடர்பான பல்சுவை சங்கதிகள் பளிச் பளிச்சென்று பத்தே நிமிடங்களில் அசத்தலாக அரங்கேறின...

அமரர் கல்கியின் 'வீணை பவானி'யை உணர்ச்சிமிகு வாசிப்பாக வழங்கினர் நாடக உலக நாயகர்கள் சுந்தர், சந்துரு. மாணவி


• வீணை பவானி



* ஓடி வந்த விநாயகர்

# துக்கடா டைம் வித் கல்கி

வர்ஷா, பவானியாக 'போஸ்' கொடுத்து உயிர் கூட்டினார். டி.கே.பிக்கு அஞ்சலி செலுத்திய கல்கி புகைப்பட அணிவகுப்பை விஜய் சிவா தொகுத்து வழங்கினார். சீதா ரவி எழுதிய ஸரிகம பாப்பா கதையை குறு நாடகமாக வடிவமைத்தளித்தார் கூத்த பிரான். வினா விடை போட்டிகளில் பரிசு பெற்ற இசை மாணவர்கள் மகிழ்ந்த னர். டி.எம்.கிருஷ்ணா, பாம்பே ஜெயஸ்ரீக்கு, கோபுலு வரைந்த கார்டூன் வடிவில் குதித்து வந்த கல்கி விநாயகர் மலர்ச்செண்டு வழங்கினார்! ஐம்பதாண்டுகளாக கல்கியில் இசை குறித்து எழுதிவரும் எழுத்தாளர் சாருகேசியை துக்கடா டைமில் கௌரவித்து மகிழ்ந்தனர் கல்கி குழுவினர்.


* சாருகேசிக்குச் சிறப்புச் செய்கிறார் துணை ஆசிரியர் அமிர்தம் சூர்யா

கார்த்திகா.வி, அபிநயா, வித்யா ராகவன், விக்ரம் ராகவன், மாதவ் அய்யங்கார், ஐஷ்வர்யா, வாரிஷா, ஸ்ருதி, ஸஹானா.

இவர்களுள் சிலர் ஒய்.ஏ.சி.எம்.(Youth Association for Classical Music) அமைப்பின் செயல்வீரர்கள். மற்றவர்கள், ஒய்.ஏ.சி.எம்முடன் இணைந்து ஸ்வானுபவாவை நடத்திய 'மாத்ருகா' நிறுவனர்களான டி.எம்.கிருஷ்ணா-பாம்பே ஜெயஸ்ரீயின் மாணவர்கள்.


* சப் ஜுனியர் ரசிகர்கள்!

இலக்கியத் துறையிலும், பத்திரிகை உலகிலும், சினிமா களத்திலும் இப்படியொரு இளமைத் திருவிழா நடக்காதா என்று ஏங்க வைத்துவிட்டார்கள் இந்த இளைஞர்கள்!

சராசரி வயது 18-19தான் இருக்கும் என்றாலும் அத்தனை கலகலப்பினூடேயும் ஒரு கௌரவமான, பண்பட்ட அமைதி! - காரணம், ஸ்வானுபவா விதித்த உடை கட்டுப்பாடு (புடைவை/வேஷ்டி-ஜிப்பா) மட்டும் அல்ல... கர்நாடக சங்கீதம் என்கிற உன்னதமான கலை உருவாக்கிய மன ஒருங்கிணைப்பும்தான்! ஹமீர் கல்யாணி, ஸரஸ்வதி, ஸஹானா என்று மாறி மாறி அழகான ராகங்களில் அறிமுக டியூன் (அருண்பிரகாஷ் போட்டது) ஒலித்தபோதே, மாணவர்களுக்கு ஒரு மியூஸிகல் ஆன்தம் கேட்டதுபோல் மனோபாவம் பிறந்தது!

இத்தனை சிறப்புகளையும் சேர்த்துக் கொண்டு ஸ்வானுபவா அடுத்த ஆண்டு ரயில் ஏறுகிறது - அயலூர்களை நோக்கி!

**– சீதா ரவி**

அட்டை, படங்கள் : **ஸ்ரீஹரி, அமிர்தம் சூர்யா**

**(ஸ்வானுபவாவில் பங்கேற்ற மாணவர்கள் கல்கிக்கு எழுதிய துணுக்குகள் அடுத்த வாரம்...)**

# வச்ச குறி தப்பாது!




அந்தக் கால 'மர்மயோகி' படத்தில் மக்கள் திலகம் எம்.ஜி.ஆர். அனல்பறக்கும் 'பஞ்ச்' டயலாக்குடன் மின்னலாய்ப் பாய்ந்து, ஈட்டிகளுக்கு நடுவே கத்தியைச் சுழற்றியபடி சண்டை போடுவதை நான் தொலைக்காட்சியில் ஆர்வத்தோடு பார்த்துக் கொண்டிருந்தேன்.

அப்போது புயல் வேகத்தில் வீட்டுக்குள் வந்த என் நண்பர், ''என்ன, நீங்கள் இன்னும் தயாராகவில்லை? துப்பாக்கிச் சுடும் போட்டி தொடங்குவதற்கு முன் நாம் போக வேண்டும்'' என்று என்னை அவசரப்படுத்தினர்.

''நான் அப்போதே ரெடி. 'மர்மயோகி'



படம்தான் உட்கார வைத்து விட்டது'' என்று சொல்லியபடி, அவரோடு காருக்கு வந்தேன். அந்தக் காரின் முன்சீட்டில் அமர்ந்திருந்த 12 வயதுப் பையன் தன் கையிலிருந்த 'ஐஸ்க்ரீமை'ச் சாப்பிடுவதே தன் வாழ்க்கையின் லட்சியமாக நினைத்து சாப்பிட்டபடி இருந்தான். நாங்கள் காரில் ஏறியவுடன், ''டிரைவர் நேராகத் துப்பாக்கி சுடும்போட்டி நடத்தும் இடத்துக்குப் போ'' என்றார் நண்பர்.

''உங்களுக்குத் துப்பாக்கி சுடும் பழக்கம் உண்டா?''

''போன வாரம் பொருட்காட்சியில பலூனைச் சுடுறேன்னு குறிவச்சு அதைத் தவிர எல்லாத்தையும் சுட்டார்'' என்று அந்த ஐஸ்கிரீம் பையன் சொன்னான்.

''நிறுத்துடா, கொஞ்சம் டச்விட்டுப் போச்சு'' என்று நண்பர் சொல்ல, ''அதுக்கு முன்னாடி துப்பாக்கியில சுட்டிருக்கீங்களா?'' என்று கேட்டேன்.

''சின்ன வயசுல, இவன் மாதிரி இருந்தப்ப ஒரு தடவை சுட்டிருக்கேன்'' என்று அவர் சொல்லுமுன்பு, ''அதுவும் பொருட்காட்சியிலதான்'' என்று அந்தப் பையன் சிரித்தபடி சொன்னான்.

''எனக்கொரு சந்தேகம்'' என்று நண்பர் தொடங்கினார். ''என்ன? துப்பாக்கி சுடும் போட்டியில இத்தனை பேர் கலந்துக்கறாங்களே. இவங்க எல்லோரும் பட்டாளத்துக்குப் போகப் போறாங்களா? இதுதானே உங்கள் கேள்வி.''

''அட, நான் கேட்க வந்ததை அப்படியே சொல்லிப்புட்டீங்க? மந்திரம் ஏதாவது தெரியுமா?''

''அதெல்லாம் ஒண்ணுமில்லை. நீங்க மூணு நாளா இதே கேள்வியைத்தான் கேட்டுக்கிட்டிருக்கீங்க. இப்பச் சொல்றேன் கேளுங்க... ஆதிமனிதன் வேட்டையாடத் தொடங்கின காலத்திலேயே ஓடும் விலங்கை, பறக்கும் பறவையை, பாயும் புலியை, நிலையாக மரத்தில் தொங்கும் கனிகளை என்று அவன் குறிபார்க்கத் தொடங்கிவிட்டான்.''

''ஓஹோ, ஈட்டி, அம்பு, வேல்னு

**கு.ஞானசம்பந்தன்**

ஆரம்பிச்சு இப்ப துப்பாக்கியில வந்து நிக்குது''

''ஆமாம். நல்லா படிச்சு முதல் மதிப் பெண்ணைக் குறிவைச்சு வாங்கறதும் குறிக்கோள்தான். அதுபோலச் சரியாக குறி வைச்சு, பொருளையோ எதிரியையோ வீழ்த்தறதும் குறிக்கோள்தான்'' என்று நான் சொல்ல, டிரைவர், ''ஐயா, எங்க ஊர் அரசியல்வாதி பதவியைக் குறிவைச்சு ஜெயிச்சாருன்னு சொல்றாங்களே'' என்று கேட்டார்.

''உண்மைதான். வேட்டைக்காரனுக்கு உணவுல குறி. படிக்கிற பையனுக்கு முதல் மதிப்பெண்ல குறி. விளையாட்டு வீர னுக்கு தங்கப் பதக்கத்துல குறி. அரசியல் வாதிகளுக்கும், சில அதிகாரிகளுக்கும் பதவியில குறி'' என்று நான் சொன்னேன்.

''வேட்டைக்காரன்... ஐ... விஜய் படம்'' என்று பையன் சிரிக்க,

''நிறுத்துடா. அது பழைய எம்.ஜி.ஆர். படம்'' என்று நண்பர் கடித்தார்.

''எதுலயும் வெற்றி பெறணும்னா பயிற்சி முக்கியம். அதோடு கவனத்தைச் சிதற விடாம மனசை ஒருநிலைப்படுத் தணும்''னு சொன்னேன்.



''அப்படின்னா என்ன?'' பையன் சந்தேகமாகக் கேட்டான்.

''உனக்கு மகாபாரதக் கதையில அர்ஜுனனைத் தெரியுமா?'' என்று நான் கேட்டேன்.

''நல்லாத் தெரியும். வில்வித்தையில 'ஃபர்ஸ்டா' வருவானே''

''அவனோட வாத்தியார் பேர் தெரி யுமா?'' ''பீஷ்மர்தானே'' - நண்பர் மெதுவா கக் கேட்டார்.

''இல்ல துரோணாச்சாரியார்'' என்றான் பையன் பளீரென்று. தன் தப்பை உணர்ந்து கொண்ட நண்பர், ''நான் சொன்னேன்ல பையன் புத்திசாலின்னு'' என்று சமாளித் தார்.

''சரி, துரோணர் பத்தி ஒரு சம்பவம் சொல்றேன் கேளுங்க. பாண்டவர்கள் ஐந்து பேருக்கும், கௌரவர்கள் நூறு பேருக்கும் அவர்தான் ஆசிரியர். வில்வித்தை தொடங்கி எல்லாம் பழகிக் கொடுத்தாரு. ஒருநாள் அவங்க எல்லாத்துக்கும் ஒரு பரீட்சை வச்சாரு.

ஒரு மரக்கிளையோட உச்சியில ஒரு குருவி பொம்மையை வச்சு, தன் மாண வர்கள் அத்தனை பேர் கையிலேயும் வில்லையும் அம்பையும் கொடுத்து குறி பார்க்கச் சொன்னார். எல்லோரும் குறி பார்த்தார்கள். துரோணர் முதலில் நின்ற தருமனைப் பார்த்துக் கேள்வி கேட்கத் தொடங்கினார்.

'மரம் தெரிகிறதா? இலை தெரி கிறதா? குருவி தெரிகிறதா?' - ஒவ் வொன்றாகக் கேட்க எல்லாவற்றுக் கும் 'தெரிகிறது' எனப் பதில் சொன் னான்.

'வில்லைக் கீழே வை. நீ போட்டியில் கலந்து கொள்ள முடியாது' என்றார் துரோணர்.''

''என்ட்ரன்ஸ்லேயே ஃபெயிலா?'' என்றான் பையன்.

''அடுத்து வந்த பீமன், துரியோதனன்

என்று அனைவரும் அப்படியே வெளியேற அர்ஜுனனிடம் கேள்வி கேட்கத் தொடங்கினார்.

'அர்ஜுனா மரம் தெரிகிறதா?' 'தெரியவில்லை ஐயா!'

'கிளை?' 'தெரியவில்லை.'

'உச்சியிலிருக்கும் குருவி?'

'தெரியவில்லை.'

'உனக்கு என்னதான் தெரிகிறது?'

'குருவியின் கழுத்து.'

'போடு பாணத்தை (அம்பை)' என்று அவர் ஆணையிட, அர்ஜுனன் விட்ட அம்பால் உச்சியில் இருந்த குருவி வீழ்ந்ததாம். இதுதான் மனத்தை ஒருநிலைப்படுத்தும் முறை'' என்று பையனுக்குச் சொன்னேன். கார் மைதானத்தை அடைந்தது.

**ந**ண்பரும், அந்தச் சிறுவனும் வேகமாக ஓடிப் போட்டியில் கலந்துகொண்டார்கள். நான் அங்கே நாகலிங்கமரத்தடியில் உட்கார்ந்து வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தேன். சற்று நேரத்தில் போட்டி முடிந்து நண்பரும், அந்தப் பையனும் ஏதோ வாக்குவாதம் செய்தபடி வந்தார்கள்.

''அது ரொம்ப நாள் ஆச்சா, அதுதான், குறி தப்பிடுச்சு'' - இது நண்பர். ''அங்கிள், இவரு துப்பாக்கியைத் தொட்டதே இல்லைன்னு நினைக்கிறேன்'' - இது பையன்.

''உங்க மாமா துப்பாக்கியைத் தொட்டாரான்னு நீ கேட்கிறது சரிதான். சுவாமி விவேகானந்தர் துப்பாக்கியில சுட்ட கதை தெரியுமா?

ஒருநாள் அவர் தன் நண்பர்களுடன் நடந்துகொண்டிருந்தார். அப்போது அங்கே சிறிய பாலத்தின் அருகே ஒரு போட்டி நடந்து கொண்டிருப்பதைப் பார்த்து அனைவரும் சற்றே நின்றார்கள். போட்டி இதுதான். ஓடிக்கொண்டிருக்கும் நீரில், அசைந்து கொண்டிருக்கும் முட்டை ஓட்டை பாலத்தின் மேலிருந்த படி, போட்டியாளர்கள் சுடவேண்டும்.

சுவாமி விவேகானந்தரோடு வந்தவர்கள், 'உங்களால் முடியுமா?' எனக் கேட்க, அவரும் அந்த முட்டை ஓட்டினைச் சுட்டு வீழ்த்தினாராம்.

உடன்வந்தவர்கள், 'இது எப்படி சாத்தியம்?' என்று கேட்க, 'கவனத்தைச் சிதற விடாமல் மனத்தை ஒரு நிலைப்படுத்தி, குறிபார்த்துச் சுட்டேன். பொருள் வீழ்ந்தது' என்றாராம் விவேகானந்தர்.'' துப்பாக்கிச் சுடும் போட்டி முடிவுகளை அறிவிக்க நடுவர்கள் மேடைக்கு வந்தனர்.

''முதற் பரிசு...'' என்று சொல்லி நிறுத்திய நடுவர், நம் நண்பரின் அருகில் நின்றிருந்த, அவரது தங்கை மகனைப் பார்த்துக் கைநீட்டியபடி, ''தம்பி... வாழ்த்துக்கள்...'' என்று சொல்ல, அந்த இடமே ஆரவாரத்தால் அதிர்ந்தது.

சிறுவன் முகத்தில் வெற்றிச் சிரிப்பு தவழ, நண்பரின் முகத்தில் பெருமிதச் சிரிப்பு!

**(வெற்றி தொடரும்)**

தெருவெங்கும் மந்திரியின் உருவத்தைத் தாங்கி நின்ற ஃப்ளெக்ஸ் போர்டுகள், கொடிகள், தோரணங்கள்.

அந்த மந்திரி அந்தத் தெருவில் நடக்கும் திருமணத்துக்குத் தலைமை தாங்க வருகிறார் என்பதால், தெருவே முதல் நாள் மாலையிலிருந்து வண்ண விளக்குகளால் ஜொலித்துக் கொண்டிருந்தது.

தெருவின் ஓரங்களில் இரண்டு பக்கமும் வட்ட, வட்டமாய் இடைவெளியிட்டு ப்ளீச்சிங் பவுடரால் கோலமிடப்பட்டிருந்தது. தெருவே கட்சிக் கரைகளாய் காட்சியளித்துக் கொண்டிருந்தது.

எல்.கே.ஜி.படிக்கும் பேரனை பள்ளி விட்டு அழைத்து வரும்போது, தெருவின் கோலாகலத்தைப் பார்த்து நடந்து வந்தவன் -

''ஏன் தாத்தா... காரெல்லாம் நிறைய வருமா?''

''ஆமா''

''வெடியெல்லாம் போடுவாங்களா?''

''நிச்சயமா போடுவாங்க''

''இது என்ன தாத்தா வெள்ளை, வெள்ளையா பவுடர்''

''அது ப்ளீச்சிங் பவுடர்''

''அதை எதுக்குப் போட்டிருக்காங்க?''

## மின்னல் கதைகள்

## உதாரணம்!

அந்த இளைஞன் பஸ்ஸில் ஏறுவான் என்று சில கணங்கள் தாமதித்த கண்டக்டர், பிறகு விசில் கொடுத்தார். பஸ் புறப்பட்டது.

இதைக் கவனித்துக் கொண்டிருந்த பங்க் கடைக்காரர், ''என்ன சார் ஏன் பஸ்ஸில் ஏறலை? யாரையாவது எதிர்பார்க்கிறீங்களா?'' என்று கேட்டார்.





''வியாதிகள் பரவாமல் இருக்க.''

''எத்தனையோ கல்யாணம் நடந்துதே, அப்பவெல்லாம் போடலியே ஏன்?''

''இது மாதிரி வி.ஐ.பி. வரும்போதுதான் போடுவாங்க.''

''இப்பப் புரியுது தாத்தா.''

''என்ன புரிந்தது?''

''வி.ஐ.பி.யாலேதான் வியாதி பரவுது. இல்லையா தாத்தா?''

தாத்தாவுக்குச் சரியான பதில் தெரியவில்லை.

# வி.ஐ.பி. வியாதி

**இந்தக் கதையை எழுதியவர் தமது பெயர், முகவரியைக் குறிப்பிடவில்லை. இந்தக் கதைக்கு, தான் வைத்த தலைப்பைக் குறிப்பிட்டு முழு முகவரியுடன் ஓர் அஞ்சலட்டையில் பதில் போடவும். படைப்புகளை அனுப்புவோர் மறவாமல் முழு முகவரியைக் குறிப்பிடுங்கள்.**

**- ஆசிரியர்**



''பஸ்ஸில் கூட்டம் அதிகமாக இருக்கு. படியிலதான் போகணும். அதனால தான்'' என்றான்.

''வயசானவங்ககூட தைரியமா ஏறும்போது இளவயசுக்காரரான நீங்க பயப்படறீங்களே...''

''பயமில்லைங்க. நான் ஒரு ஆசிரியர். எதைச் செய்தாலும் கவனமா செய்யணும். நானே ஒழுக்கம் தவறினால் இந்தச் சமுதாயத்தை வெகுவாகப் பாதிக்கும். மாணவர்களுக்குத் தப்பான உதாரணமாகிடுவேன். அதனாலதான் பஸ்ஸில் ஏறலை'' என்று சொல்லி ஆட்டோவைக் கூப்பிட்டு அமர்ந்தான். ஆட்டோ புறப்பட்டது.

''பைத்தியக்காரன். ரெண்டு ரூபாயில் ஸ்கூலுக்குப் போகாமல் இருபது ரூபாயை ஆட்டோவுக்குக் கொடுக்கிறான் பாருங்க'' என்று அருகில் இருந்தவனிடம் கிண்டலாகக் கூறிப் புன்னகைத்தார் பங்க் கடைக்காரர். ●

'வட்டமேஜை' பகுதியை இப்படி கட்டுரை மாதிரி போட்டு 'கன்ஃப்யூஸ்' பண்றீங்களே நியாயமா?

**- எல்.மோகன சுந்தரி, கிருஷ்ணகிரி**

'மிச்சம் தந்த அழகு' சிறுகதையில் கிராமமாக இருந்தாலும் வரவு-செலவில் கெட்டிக்காரத்தனம் பெண்களுக்கே அதிகம் என்பதை கச்சிதமாய்க் காட்டியது.

**- 'வானவில்' மூர்த்தி, கடலூர்**

'தேர்தல் திரிசமங்கள்' சமயத்துக்கு ஏற்ற சூப்பரான தலையங்கம். இதைவிட மக்களுக்கு எப்படிச் சொல்ல முடியும்?!

**- ஆர்.ராஜாமணி, சென்னை - 88**

இடைத்தேர்தல் டிரெய்லர் படித்தது நாங்களே அந்தத் தொகுதிகளுக்கு விசிட் அடித்தது போல இருந்தது

**- ஆர்.ரங்கநாதன், சென்னை - 17**

கிரேஸிமோகன், 'சுருக்'கென சொன்ன சிறுகதை, 'நறுக்'கென, 'முறுக்'காய் இருந்தது!

**- வே.ந.கதிர்வேல், வேலூர்**

கத்தாழை சேலை - அன்னாசி சட்டையைத் துவைச்சுக் காயப் போட முடியுமா? அல்லது ஜீன்ஸ் மாதிரி வருடத்துக்கு ஒரு முறை அலசுவதா?

**- ரஞ்சனிப்ரியன், பள்ளிபாளையம்**

முழுப்பக்க அளவில் வெளியான பாகவதர் - தமன்னா ஜோக் அட்டகாசம்! தமன்னாவுக்குச் மொழிப்பெயர்த்துச் சொல்லுங்க!

**-கே.தெய்வசிகாமணி, சென்னை-82**

'அகில இந்திய காதலர் கட்சி'த் தலைவர் குமார்ஸ்ரீஸ்ரீயின் கலக்கல் பதில்களுக்கு நீங்கள் தந்த கமெண்ட்ஸ் சூப்பர் தலைவா!

**- எம்.சம்பத், கரூர்**



# தமன்னாவுக்குச்

தாய்ப்பால் குடிக்கும் குழந்தைகள் எந்தவித நோய்நொடியும் இன்றி நூறு வருடங்கள் வாழ முடியும் எனும்போது, அந்தத் திட்டத்துக்கு 'ப்ராஜெக்ட் சிரஞ்சீவி' என்ற பெயர் வெகு பொருத்தம்.

**- டி.எம்.விஸ்வதா, திண்டுக்கல்**

'சினி சிப்ஸ்' தகவல்கள் முற்றிலும் புதுசு கண்ணா புதுசு.

## வட்டமேஜை

### துப்பறிய வாங்க போட்டி - 6 முடிவு

சரியான விடையை நான்கு பேர்களே எழுதினார்கள். இவர்களுக்கு ரூ.250/- வீதம் பரிசுத் தொகை அளிக்கப்படுகிறது.

1. எம்.சம்பத், வேலாயுதம்பாளையம்
2. டி.எஸ்.விஸ்வநாதன், சென்னை
3. ஆர்.பிரகாஷ், பொன்மலை
4. பாலு, நாமக்கல்

திரைப்பட ரசிகர்களுக்கு விருந்தளித்தது.

- என்.காளிதாஸ், சிதம்பரம்

இடைத்தேர்தல் ட்ரெய்லர் படித்தேன். நடப்பது 'ஜனநாயகமா?' அல்லது 'பண நாயகமா?'

- கிரிஜா ராகவன், கோவை-36

'பத்திரமா பார்த்துக்குங்க' தலைப்பை இன்னும் சின்ன எழுத்தில் போட்டி

## சொல்லுங்க!

ருந்தால் மெதுவாகக் கொடுக்கும் குரலுக்குப் பொருத்தமாக இருந்திருக்கும்.

- அ.சம்பத், கோயம்புத்தூர்

கல்கி (9.8.2009) இதழில் 'ஒற்றை ஊசி சிகிச்சை' மருத்துவக் கட்டுரையில் புகைக்கும் பழக்கம் நெருப்பு சக்தியோடு தொடர்புடையது என்பதற்குப் பதிலாக 'காற்று சக்தி' எனவும், கல்லீரலைப் பாதிக்கும் மதுப் பழக்கம் நிலம் சக்தியோடு தொடர்புடையது என்பதற்குப் பதிலாக 'மரம் சக்தி' என்றும் திருத்தி வாசிக்கவும்.

- ஆர்.



# "சச்சின் மனது வைத்திருந்தால் என்னைக் கைதூக்கி விட்டிருக்க முடியும்!"

ஹிந்தி சேனல்களில் ரியாலிட்டி ஷோவின் தாக்கம் இன்று உச்சத்திலிருக்கிறது. ஷோ என்றால் கான்ட்ரோவர்ஸி வரணும், அமைதி கெடணும், ஒருவித மனக்கசப்பை ஏற்படுத்தணும்! 'இப்படியெல்லாம் கூட பப்ளிக்கா பேச முடியுமா, வசைபாடுவதில் இத்தனை வெரைட்டியா, பெண்கள் இப்படி கூட ட்ரஸ் (பல சமயம் ட்ரஸ் எங்கே என்று தேட வேண்டிய கட்டாயம்) போடுவார்களா, இவர்களுக்கெல்லாம் உற்றார், உறவினர், பெற்றோரே கிடையாதா, டி.வி.யில் சான்ஸ் கிடைத்தால் என்ன வேண்டுமானாலும் பேசி விடுவதா?' இப்படிப் பல கேள்விகள், கொந்தளிப்புகள்.. பொது மக்களிடையே.

இண்டியன் ஐடல், நச் பலியே, லாஃப்டர் சாலன்ஜ் ஸரிகமப... என்ற பாட்டு, டான்ஸ், காமெடி ஷோக்களுக்குப் பேராதரவு! இதில் பங்குபெற்றவர்கள் இன்று புகழ், பணம் இரண்டுமே பார்த்து விட்டார்கள். சேனல்களுக்கும் வெற்றி, பணம்! எஸ்.எம்.எஸ்ஸில் வின்னரைத் தேர்ந்தெடுங்கள் என்று பொது மக்களை உசுப்பி விட்டு (பின்னே எதற்கு சிம்மாசனத்தில் ஜட்ஜுகள்... வெட்டியா சம்பளத்தை வாங்கிக் கொண்டு?) அதில் எக்கச்சக்க லாபம். செல்ஃபோன் கம்பெனி + சேனல் இரண்டுமே லாபத்தை அள்ளிக் கொண்டிருக்கின்றன.

பிக் பிரதர் என்ற வெளிநாட்டு ஷோவைக் காப்பியடித்து பிக் பாஸ் என்ற புரோகிராம் சோனியில் வர, அதற்கு பயங்கர வரவேற்பு! பல செலிப்ரிட்டிகளை ஒரு வீட்டில் மாதக்கணக்காக அடைத்து, அதை நேரடி ஒளிபரப்பு! எப்படி ட்ரஸ், என்ன சண்டை, அடிதடி, அவர்களுடைய உண்மையான முகம் என சேனலில் காண்பிக்க டீ.வி. நேயர்களுக்கு நட்சத்திரங்களுடன் கூடவே இருந்தாற்போல கிளுகிளுப்பு, பரவசம்...

பிறகு வந்தது கலர்ஸ் சேனலில் ஆக்ஷன் ஹீரோ அக்ஷய்குமாரின் 'கத்தரோன் கே கிலாடி'. இதுவும் வெளிநாட்டு ஷோவான ஃபியர் ஃபாக்டரின் தழுவல். இதில் சுமார் 13 பியூட்டிகள். பாம்புடனும், முதலையுடனும் தழுவல், ஹெலிகாப்டரிலிருந்து ஊஞ்சல், மலை மீதிருந்து குதித்தல்... என சாகசச் செயல்களைப் புரிந்துவிட்டு பணத்தை எண்ணிக் கொண்டிருக்கின்றனர். சமீபத்தில் ஸ்டார் விஜய்யில் வரும், 'அணு அளவும் பயமில்லை' என்பது கத்தரோன் கே கிலாடியின் அட்டக் காப்பி!

சமீபத்தில் அறிமுகமாகிய ஸ்டார் ப்ளஸ்ஸில் வெளிவந்து கொண்டிருக்கும்

## சேனல் சர்ச்சை

ரியாலிட்டி ஷோவான 'சச்சா சாம்னா' ஒரு பெரிய பூகம்பத்தையே ஏற்படுத்திக் கொண்டிருக்கிறது. உண்மை சொல்ல வேண்டும். அதுவும் 21 முறை ஜெயித்தால் ஒரு கோடி ரூபாய் என்ற சவால்! கேள்விகள் என்ற பெயரில் கேட்கப்படுவதை நம் பத்திரிகையில் எழுத முடியாது. நாகரிகம், பாரம்பர்யம் நம்மைத் தடுக்கிறது. வினோத் காம்ப்ளி, சச்சின் டெண்டுல்கரின் நட்பு ஊரறிந்தது. சமீபத்தில் நிகழ்ச்சியில் கலந்து கொண்ட காம்ப்ளி, 'சச்சின் மனது வைத்திருந்தால் என்னைக் கைதூக்கி விட்டிருக்க முடியும்...' என்ற ரீதியில் 'உண்மை' பேச அவர்கள் மத்தியில் விரிசல்! லை டிடெக்டர் வைத்து பொய்யா நிஜமா-எனக் கண்டு பிடித்து விடுவோம் என்கிறது புரோகிராம் குழு. இதில் கலந்துகொள்ள, சுமார் இருபதாயிரம் பேர் காத்திருக்கிறார்களாம். நம் பார்லிமெண்ட் வரை புரோகிராம் சலசலப்பைக் கிளப்ப, சேனல் இதை இரவு பதினொரு மணிக்கு ஒளிபரப்பப் போகிறது. இதுவரை உண்மை பேசவில்லையா; பேசிவிட்டால், உண்மையைப் போட்டு உடைத்து விட்டால் நீ கோடீஸ்வரன் என்ற பேராசையைத் தூவி காசு பார்க்கும் நபர்களை என்ன சொல்வது? சண்டை, சச்சரவு, ஆபாசம் என்று எல்லாமே ஓவராக இருக்கும் ரியாலிட்டி ஷோ, இன்று ஜனங்களின் பேராதரவு பெற்றிருக்கிறது என்பதும் உண்மை! யாரைக் குற்றம் சொல்வது? புரோகிராம்களையா? பொதுமக்களையா?

- லதா சேகர்

# உண்மையைச் சொன்னால் ஒரு கோடி!



*நோட்டீஸ் ஒட்டாதே!*
*விளம்பரம் செய்யாதே!*
*சிறுநீர் கழிக்காதே!*

- இப்படி கெஞ்சியும் மிரட்டியும் கொண்டிருந்த சென்னை அண்ணாசாலை சுவர்கள் இப்போது மாறிவிட்டன.

சென்னை மாநகராட்சியைக் குறை சொல்வதற்கு நிறையவே விஷயங்கள் இருந்தாலும், அவ்வப்போது ஏதாவது உருப்படியாகச் செய்து 'அட' என ஆச்சர்யப் படுத்தும்போது பாராட்டாமல் இருக்க முடியவில்லை. அப்படித்தான் சமீபத்தில் அண்ணாசாலையின் நந்தனம் பகுதியில் கால்ஃப் மைதானத்தை ஒட்டிய காம்பவுண்டு சுவர் முழுவதும், தமிழ்நாட்டின் கலை, கலாசாரத்தை வெளிப்படுத்தும் விதமாக அற்புதமான ஓவியங்களை வரைய வைத்து 'வாவ்!' சொல்லவைத்துள்ளது மாநகராட்சி. மகாபலிபுரம் சிற்பங்கள், திருச்சி மலைக்கோட்டை, தஞ்சை பெரிய

# புகைக்கு நடுவே புன்னகை!



கோயில் நந்தி, ராமேஸ்வரம் கோயிலின் பிராகாரம், ரவிவர்மா ஓவிய நகல்கள்... என்று பல ஓவியங்கள் பார்வையைக் கவர்கின்றன.

"சென்னை நகரை அழகுபடுத்தும் நடவடிக்கையில் முதல் கட்டம்தான் இது. அண்ணாசாலையின் இந்தப் பகுதியைக் கடப்பவர்கள் இந்த ஓவியங்களைப் பார்த்து ரசித்து வியக்கிறார்கள். இதற்குக் கிடைத்துள்ள வரவேற்பு எங்களுக்கு மகிழ்ச்சியூட்டுகிறது! இதைப்போல, ஓவியங்கள் வரைவதற்கு சென்னை நகரத்தின் தேனாம்பேட்டை டி.எம்.எஸ். வளாகம், காமராஜர் சாலையின் ஒரு பகுதி, அண்ணா மேம்பாலம், வள்ளுவர் கோட்டம், கன்னிமாரா நூலகம் போன்ற இடங்களைத் தேர்ந்தெடுத்திருக்கிறோம்" என்கிறார் சென்னை மாநகராட்சி மேயர் மா.சுப்ரமணியம்.

இந்த ஓவியங்கள் வரையும் பணியை ஓவியர் ஜே.பி.கிருஷ்ணாவின் குழு ஏற்றுக் கொண்டிருக்கிறது! குமரி திருவள்ளுவர் சிலையின் ஓவியத்துக்கு இறுதி டச்-அப் கொடுத்துக் கொண்டிருந்த கார்த்திகேயன், "முன்னாடி பேனர் ஓவியங்கள் செஞ்சுக்கிட்டிருந்தேன். டிஜிட்டல் பேனர்கள் வந்த பிறகு ரொம்ப கஷ்டமா இருந்தது. நடுவுல வேலை இல்லாம போயிடுச்சு. இப்போ பிரஷ் பிடிக்கிறது எங்களுக்கு மறுபிறவி மாதிரி சந்தோஷமா இருக்கு" என்கிறார்!



செய்தி, படங்கள் : **எஸ்.சந்திரமௌலி**

Registered with the Registrar of Newspaper of India under No. 1041/57 * Registered No. TN / CC (S) DN / 144 / 09 -11 * Licensed to post without prepayment under PMG's Licence No. WPP TN / CC (S) DN / 70 / 09 - 11* Registered as a Newspaper in Srilanka.